

# புனித தரீக்காக்களில் வஹ்ஹாபிய விஷக் கிருமிகள்

அளவற்ற அருளாளனும், நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் துவக்கம் செய்கிறேன்.

அகிலத்தின் அருட்கொடையான அண்ணல் எம்பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் மீதும், அவர்களது புனித குடும்பத்தினரான சாதாத்மார்களின் மீதும், சத்திய ஸஹாபாபெருமக்கள் மீதும், வலிமார்கள், நாதாக்கள், மீதும், அல்லாஹ் என்றும் ஸலாத்தையும் ஸலாமையும் பொழிவானாக. ஆமீன்.

தமிழக முஸ்லீம்கள், இஸ்லாமிய கொள்கை கோட்பாடுகளில் அல்லாஹ்வும் அவனது தூதர் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களும் கலீபாக்களும், ஸஹாபா பெருமக்களும், தாபியீன்களும், தபவுத் தாபியீன்களும், இமாம்களும், அவ்லியாக்களும், ஸூபிஸத்தை போதிக்கும் ஷைகுமார்களும், சங்கைக்குரிய உலமாக்களும் எதை மார்க்கம் என கற்றுத்தந்தார்களோ அதன்படியே வாழ்த்து வருகிறார்கள்.

சுருக்கமாக சொல்வதானால் அஹ்லெசுன்னத் வல் ஜமாத்துடைய கொள்கை கோட்பாடுகளை பேணி பாதுகாத்து வருகிறார்கள்.

இப்புனிதமிக்க கொள்கை கோட்பாடுகளில் குழப்பத்தை உருவாக்க, யாரிடமோ கைக்கூலி பெற்ற சில

சுயநலவாதிகள், தேவ்பந்தி தப்லீக்ஜமாத், தௌஹீத் ஜமாத், ஜமாத்தே இஸ்லாமி, காதியானி, நத்வி, உமரி, ஜாக், அஹ்லெஹதீஸ், அஹ்லெ குர்ஆன் எனபற்பல பெயர்களில் எங்கும் நிறைந்து ஊடகங்கள் வாயிலாக ஒவ்வொரு முஸ்லீம்கள் வாழும் மூலை, முடுக்கிலும், குடும்ப உறவுகள் மத்தியிலும் வழிகெட்ட வஹ்ஹாபிய விஷ வித்துக்களை தூவ முயர்சித்தும் 95% மக்கள் அதன் கொடூர கொள்கைகளை வேரறுத்து வெளியே தள்ளி விடுகின்றனர் என்பதனை வலிமார்களின் தர்கா சன்னி தானங்கள் தோறும் கூடும் மக்கள் கூட்டமும், பாத்திஹா, கந்தூரி, கொடியேற்றங்களும் பறைசாற்றுகின்றன.

உடலை சீர்படுத்தும் வெளிரங்கமான ஷரீஅத் சட்டங்களைக் கொண்டு தன் ஆன்மாவை சீர்படுத்தும் அந்தரங்கமான தரீகத் சட்டங்களை பயில்வதற்காக ஒவ்வொருவரும் தன் வழிகாட்டியான ஞான ஆசிரியர் ஒருவரிடம் பைஅத் பெறவேண்டும். அவரின் வழிகாட்டுதல்படி நடக்கும் போதுதான் நமது ஆன்மா தூய்மையடைகிறது.

" தூய்மை அடைந்த ஆன்மாவே வெற்றிக்கு உரியது"

– அல்குர்ஆன்.

" யாருக்கு ஷைகு எனும் ஞான ஆசிரியர் இல்லையோ அவருக்கு ஷைத்தான் ஷைகாக இருப்பான் "

– முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி. (ரலியல்லாஹ் அன்ஹு)

இந்த உண்மையை புரிந்து காமிலான ஷைகை தேடி செல்லும் போது தான் ஒரு பிரச்சனை உதயமாகிறது.

இமாம்களை ஏற்றுக் கொள்ளமாட்டோம்

அவ்லியாக்களை ஒப்புக்கொள்ள மாட்டோம் என வெளிப்படையாக அறிவித்து வழிகெட்ட வஹ்ஹாபிய (அதாவது சுன்னத்வல் ஜமாத்துக்கு மாற்றமான) கொள்கைகளை வெளிப்படையாக ஏற்று நடக்கும் தௌஹீத் ஜமாத் -TNTJ - நஜாத் - ஜாக்-உமரி போன்ற இயக்கங்கள் ஒருபோதும் " தரீக்கா " எனும் ஆன்மாவை பரிசுத்தப்படுத்தும் பயிற்சியை ஒப்புக்கொள்வதே இல்லை. எனவே இந்த வழிகேடர்களால் காமிலான ஷைகைத் தேடுமிடத்தில் எந்த சிக்கலுமில்லை.

" நாங்கள் இமாம்களை பின்பற்றுகிறோம்," "நாங்களும் ; சுன்னத் ஜமாத்துதான்" எனக்கூறும் ஆபத்தான வழிகேடர்களான தப்லீக் ஜமாத்தினர்கள் தான் வஹ்ஹாபி கொள்கைகளை மறைத்து தொழுகைக்கு அழைக்கின்றோம் என்ற போர்வையில் வஹ்ஹாபி விஷத்தை தூவும் இந்த கேடுகெட்டவர்கள் தாம் வழிகேடர்களில் மிகவும் ஆபத்தானவர்கள்.

" தொழுகைக்குதான் அழைக்கின்றோம்" என்ற பசப்பு வார்த்தையின்மூலம் மக்களை வழி கெடுத்தது போதாது என்று புனிதமான தரீக்காவின் பெயர்களை கூறி தன்னை ஷைகு என போலி வேடம் தரித்து தற்காலத்தில் வஹ்ஹாபிய கொள்கைகள் தரீக்காவின் வேடம் பூண்டு தமிழகத்தில் நுழைந்துள்ளார்கள்.

வஹ்ஹாபிய விஷம் எந்த பெயரில் வந்தாலும் அதன் உண்மையை கண்டறிந்து மக்களுக்கு அதிலும் குறிப்பாக தமிழக முஸ்லீம்களை எச்சரிக்கை செய்வதே இச் சிறுநூலின் நோக்கமாகும்.

17.02.1995 அன்று மஜ்லிஸ் உலமாயி அஹ்லெ சுன்னத் வல்ஜமாத் (தமிழ்நாடு) தீர்மானம் இப்படி மக்களை எச்சரிக்கின்றது.

" தரீக்கா " எனும் போர்வையில் தப்லீக்ஜமா அத்தினர் செய்யும் துரோக செயல்களை தடுப்பதென்றும், இந்த சூழ்ச்சியிலிருந்து உம்மத்தே முஹம்மதியாவை காப்பதென்றும், " காபிர் " என தீர்ப்பளிக்கப்பட்ட மௌலவி அஷ்ரப் அலி தானவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்ற வஹ்ஹாபிகளை ரஹ்மத்துல்லாஹி அலைஹி எனக் கூறி தன்னை ஷெய்குமார்களாக சொல்லிக்கொண்டு தரீக்காவை உடையவர்கள் போல் திரியும் மௌலவி MJ. முஹம்மது கமாலுதீன் பாகவி (ஆரணி) அவர்களையும் அவரது கலீபாக்களையும் வழிகேடர்கள்! என்று இக்கூட்டம் தீர்மானிக்கிறது. மேலும் இத்தகைய ஷைகுமார்களிடம் பெறப்பட்ட பைஅத் செல்லாது என்றும் பைஅத் வாங்கியவர்கள், தமது முரண்பட்ட ஷைகுமார்களை விட்டும் உடனடியாக விலக வேண்டுமென்றும் இச்சபை கேட்டுக் கொள்கிறது. "

ஆரணிபாபா என்று அழைக்கப்பட்ட MJ. முஹம்மது கமாலுதீன் பாகவி என்பவர் தன்னை வெளிப்படையாகவே சிஷ்திய்யா ரஷீதிய்யா எனும் தரீக்காவின் ஷெய்கு என்று கூறினார். அதாவது, ரசூல்லாஹ்வை தனது தரம் தாழ்த்த அறிவால் தகாத வார்த்தைகளால் ஏசிய ரஷீத் அஹ்மத் கங்கோஹி என்பவர் தேவ்பந்தை சார்ந்த வஹ்ஹாபிய வழிகேடர். இவர் இவரது குருவான ஷெய்கு காமில் அல்லாமா முஹாஜிர் மக்கி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் "ஹப்து மஸ்அலா" என்ற நூலை பகிரங்கமாக " எனது ஷெய்கு குப்ரு செய்து விட்டார் " எனகூறி நடு ரோட்டில் வைத்து எரித்ததால் இந்த ரஷீத் அஹ்மத் என்பவருக்கும் ஹாஜி முஹாஜிர் மக்கிரஹிமஹுல்லாஹ் என்பவருக்கும் இடையே இருந்த நிஸ்பத் எனும் தொடர்பு

துண்டிக்கப்பட்டுவிட்டது. (தேவ்பந்த்தின் 200வருட இறைநேசசெல்வர்கள். (பக்கம் - 168)
(உலகிலேயே தனது ஷைகின் பேரில் குப்ரு பத்வா கொடுத்தவர் இவராகத்தான் இருப்பார் போலும்).

இந்த சம்பவத்திற்கு பின்னால் இந்த ரஷீத் அஹ்மத் எனும் வழிகேடர் தன்னை சிஷ்திய்யா ரஷீதிய்யா எனும் பெயரில் ஓர் தரீக்காவை ஏற்படுத்தி மக்களை வழி கெடுத்தார். இந்த போலியான ரஷீதிய்யா எனும் வழிகெட்ட தரீக்காவின் ஷைகாக தமிழகத்தில் விளங்கியவர்தான். இந்த MJ. முஹம்மது கமாலுதீன் என்பவர். இந்த தரீக்கா போலி என்பதற்கான ஆதாரங்கள்.

1. ஹாஜிமுஹாஜிர் மக்கி அவர்களுடன் இந்த தரீக்கா சில்சிலா தொடர் அறுபட்டுவிட்டது.

2. ரஷீத் அஹ்மத் என்பவர் வழிகெட்ட வஹ்ஹாபியாக இருந்தார். ரசூலுல்லாஹ்வை தரக்குறைவாக தனது நூலான பதாவா ரஷீதிய்யா, எனும் நூலில் எழுதியதன்காரணமாக உலக மார்க்க அறிஞர் பெருமக்களால் காபிர் என தீர்ப்பளிக்கப்பட்டவராவார். இப்படிப்பட்ட வஹ்ஹாபியை எப்படி? ஒரு தரீக்காவின் ஷெய்காக ஒப்புக்கொள்ளமுடியும். ஆகவே இந்த சிஷ்திய்யா ரஷீதிய்யா எனும் தரீக்காவின் கீழ் செயல்படும் பேரணாம்பட் அப்துல்பஷீர், அவரது கலீபா ஆரணி கமாலுத்தீன் பாகவி மற்றும் அவரது கலீபாக்கள் என அனைவருமே தவறான ஓர் தரீக்காவில் மக்களை வழிகெடுக்க முனைந்ததாலேயே தமிழ்நாடு மஜ்லிஸ் உலமா சபை மேற்கண்ட தீர்மானம் நிறைவேற்றி மக்களை எச்சரித்தது.

இன்னும் இதே உலமா சபை 8.08.2006ல் நிறைவேற்றிய தீர்மானத்தின் சாரமிது.

டில்லி ஹஜ்ரத் நிஜாமுத்தீன் அவுலியா பாரம்பரியத்தை சார்ந்த காஜா ஹஸன் நிஜாமி அவர்கள் எழுதியதாக, இஃப்திராகே பைனல் முஸ்லிமீன்கே அஸ்பாப் எனும் நூலில் " வஹ்ஹாபிகள் கூட தரீக்காவில் புகுந்து முரீது கொடுக்கிறார்கள். அவர்கள் தான் தேவ்பந்திகள்" என்கிறார்கள்.

நூரிஷாஹ் என்பவரும் அவரை சார்ந்து தங்களை கலீபாக்கள் என கூறிக்கொள்வோரும் அந்தரங்கமாகவும், சில வேளைகளில் வெளிப்படையாகவும் தேவ்பந்திய தப்லீக் வஹ்ஹாபிய தலைவர்களான அஷ்ரப் அலி தானவி, ரஷீத் அஹ்மத் கங்கோஹி போன்றவர்களை ஆதரிக்கின்றார்கள்.

ஹகீகதே கிதாபவி வக்புல் இக்லாஸ் இஸ்தான்புல் துருக்கி நாட்டை சேர்ந்த ஹஜ்ரத் ஹுஸைன் ஹில்மி என்பவர் " நூரிஷாஹ் தரீகா வழிகெட்டது" என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

சமஸ்த கேரளா உலமா சபை 30.7.1996 அன்று சுன்னத் ஜமாத் கொள்கைகளுக்கு மாற்றமான நூரிஷாஹ் தரீக்காவை விட்டு பொதுமக்கள் ஒதுங்கி இருக்குமாறு வேண்டுகோள் விடுத்துள்ளது.

" *அஸ்ராரே கலிமதுத்தய்யிபா* " என்ற நூலில் நூரிஷா, அஷ்ரப் அலி தானவியை புகழ்ந்து தள்ளுகிறார்.

இவையெல்லாவற்றையும்விட நூரிஷாஹ், ஜாமியா இல்ாஹியாத் என்ற மதரஸாவை ஹைதராபாத்தில் துவங்கிய போது தேவ்பந்து ஸ்தாபகரின் பேரரான மௌலானா காரி தைய்யிப் சாஹிப் தேவ்பந்தியை வைத்தே

திறப்பு விழா நடத்தினார் என்றால் நூரிஷாஹ் தரீக்தா எதை சார்ந்தது என்பது தெளிவாகிறது.

பைஜிஷாஹ் 19 ஆண்டுகள் தப்லீகில் சுற்றியதும், தேவ்பந்திகளை மிகப் புகழ்ந்தும் " நூருன் நூர்" என்ற நூலில் 11 வது பக்கத்தில் எழுதியிருப்பதும் வஹ்ஹாபிய அடையாளங்களின் எச்சங்களே !

ஆகவே இந்த ஆதாரங்களால் நூரிஷாஹ்விடம் பெற்ற பைஅத்தும்-கிலாபத்தும் செல்லாது என மஜ்லிசு உலமாயி அஹ்லெ சுன்னத்வல்ஜமாத் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.

– நன்றி தர்கா இதழ். ஜுலை 2009

இவ்வாறு பொதுமக்களை வஹ்ஹாபிய கொள்கையை விட்டும் பாதுகாக்கும் முகமாகவும் – தவறானவர்களை இனம் காட்டும் முகமாகவும் நாம் நூரிஷாஹ் தரீக்கா பற்றிய பல்வேறு உண்மைகளை இதில் தெளிவுபடுத்தி உள்ளோம். இவையாவும் **Sufimanzil. Org** என்ற இணையதளத்தில் வெளிவந்த " நூரிஷாஹ் தரீக்கா பற்றிய உண்மைகள் " என்ற கட்டுரையின் நூல் கோர்வையாகும்.

அல்லாஹ் நமக்கு உண்மையை விளக்கி உண்மையான அஹ்லெ சுன்னத்வல் ஜமாத்தின் கொள்கை கோட்பாட்டின்படி நடந்து நல்ல காமிலான ஷெய்குமார்களின் கரம்பிடித்து கரைசேர்வதற்கும் தவ்பீக் செய்வானாக. ஆமீன்.

மௌலவி M. அப்துர் ரஸ்ஸாக் காதிரி ஸூபி
பேராசிரியர்,தாருல் உலூம் கௌதிய்யா, தஞ்சை.

# " நூரி ஷாஹ் " ஓர் அறிமுகம்

தமிழகத்தில் சுமார் 30 வருடங்களுக்கு முன் மெய்ஞ்ஞான வழி. தரீகத், சுன்னத் வல் ஜமாஅத், ஷெய்குமார்கள் என்ற போர்வையில் நுழைந்த இயக்கம்தான் நூரி ஷாஹ் தரீக்கா ஆகும். இவர் தன்னை காதிரிய்யா, சிஷ்திய்யா தரீக்காக்களின் ஷெய்கு என்று பிரபலப்படுத்திக் கொண்டுதான் நுழைந்தார். பின் மக்களிடையே நான் ஸில்ஸிலாயே நூரிய்யா என்ற தரீக்கத்தின் ஸ்தாபகர் என்று கூறிக் கொண்டார். நன்கு நாவன்மையுடைய அவருடைய பேச்சில் மதிமயங்கி கேரளா, தமிழ்நாடு முஸ்லிம்களில் ஆலிம்களும் அவரிடம் பைஅத்; வாங்கினார்கள்.

இதற்கிடையில் சென்னை திருவல்லிக்கேணி பகுதியில் இவரது ஷெய்கான " கௌஸ் அலி ஷாஹ் " என்பவர் தமது தரீக்காவை நிறுவி அங்கும் முரீதுகள் கொடுத்து வந்தார். இந்நிலையில்தான் நூரி ஷாஹ் தமிழகத்தில் நுழைந்தார். இவ்விருவர்களுக்கிடையே பிரச்சனைகள் தோன்றி இருவரும் சொற்போரில் ஈடுபட்டனர். அவன் என் " முரீது இல்லை மரீதாகி விட்டான் " என்று ஷெய்கு கூறும் அளவிற்கு, ஷெய்கின் முரீதுகள் நூரி ஷாஹ்வா? நாரி ஷாஹ்வா? என்று வால்போஸ்டர் ஒட்டி பிரபலப்படுத்தியிருக்கும் அளவிற்கு பகைமைகளை வளர்த்துக் கொண்டனர்.

கேரளா சென்று அங்கும் தன் தரீக்காவை பரப்பிய நூரிஷாஹ் பட்டிக்காடு என்னும் ஊரில் ஜாமிஆ அரபிய்யா நூரிய்யா 'என்ற அரபு கல்லூரி (மத்ரஸா) யை தோற்றுவித்தார்.

மக்கள் இவர் சேவையாற்றுகிறார் என்று எண்ணி

இவர் தரீக்காவில் சேர ஆரம்பித்தனர். இவரின் தரீக்காவில் மக்கள் கூட்டம் அதிகமாகவே தன் கொள்கைகளை பகிரங்கமாக பேச ஆரம்பித்தார். இவரின் இந்தப் போக்கை கண்ட கேரளாவின் சமஸ்த கேரளா **ஜம்இய்யத்து உலமா** சபையினர் மௌலவி கே.கே. அபூபக்கர் முஸ்லியார் தலைமையில் ஒன்று கூடி இவரின் கொள்கை மற்றும் தரீக்கத்தை ஆய்வு செய்து கடந்த 16.12.1974 அன்று, நூரிஷாஹ் தரீக்கா இஸ்லாம் மார்க்கத்தின் ஷரீ அத்திற்கு மாற்றமானது என்றும், ஆகவே பொதுமக்கள் இத்தரீக்காவில் ஈடுபடாமல் ஒதுங்கி இருக்குமாறு மக்களை வேண்டி தீர்மானம் நிறைவேற்றி பகிரங்கப்படுத்தினார்கள்.

அதன்பின் கேரளா பட்டிக்காடு நூரிய்யா மத்ரஸாவை விட்டும் நூரிஷாஹ் தரீக்காவினர் வெளியேற்றப்பட்டு சுன்னத் வல் ஜமாஅத்தினர்கள் அந்த நிர்வாகத்தை எடுத்து நடத்தி வருவது குறிப்பிடத்தக்கது.

15-5-77 அன்று ஹாஜி எம்.அப்துல் ஹகீம் சாகிப் (ஆயங்குடி) அவர்களால் வெளியிடப்பட்ட பிரசுரத்தில், நாகப்பட்டினம் நஸீஹத்துல் இஸ்லாமிய அங்கத்தினர் கேட்ட கேள்விகளுக்கு கேரளா ஜன்னத்துல் உலூம் அரபிக் கல்லூரி முதல்வர் இ.கே. ஹஸன் முஸலியார் (பாகவி) அளித்த விளக்கவுரையின் இறுதியில் இத்தரீக்காவானது மார்க்கத்திற்குப் புறம்பானதும், அதனுடைய அந்தரங்கம் குஃப்ரின்பால் சேர்ந்ததுமாகும் என்றும்,

" எவர் தன்னை ஷைகு என்று தாவா செய்து கொண்டு மேற்கூறிய செயல்களை செய்கின்றாரோ அவர் முழுப்பொய்யராவரர் அவரைவிட்டு நீங்குவதும்,

முஸ்லிம்களை விட்டு அவர்களை விரட்டுவதும் வாஜிப் எனும் கடமையாகும் என்றும் கூறியுள்ளார்கள்.

ஏன் இந்த பத்வா? அதில் கொடுக்கப்பட்டிருந்த காரணங்கள்:

1. ' முஹம்மத் ', அஹ்மத் என்பவற்றை திக்ரு செய்வது மார்க்கத்திற்கு முரண்பட்டது. பழிப்பிற்குரிய தீமையாகும். ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மரியாதையைக் கிழிப்பதாகும்.

2. பெண்களுடன் அவரும் அவருடைய கலீபாக்களும் நேரடியாக பேசுவதும், பெண்கள் ஷைகுடைய கால், கைகளை பிடித்துவிடுவதும் ஹராமானதாகும் என்பவை முக்கியமானவை.

இவ்வாறு ஆலிம்களாலும், உலமா சபையினராலும் விரட்டப்பட்ட ஷைத்தானியத்தான தரீக்காவின் அடிமூடு (மூல பிதாக்கள்) எத்தகையவர்கள், ஞானவழித் தொடர் எத்தகையது? அவர்கள் ஞானம் பற்றிய கருத்து என்ன? தற்போதுள்ள கலீபாக்களின் நிலை என்ன? அனைத்தும் சுன்னத் வல் ஜமா அத்தின் கொள்கைகளுக்கு ஒப்பானதா? முரண்பட்டதா? என்று சற்று ஆராய்வோம்.

## நூரிஷாஹ்வின் ஞானவழித் தொடர்

தரீக்கா என்றால் மெய்ஞ்ஞான நாதாக்களின் வழித்தொடர் (ஸில்ஸிலா) அவசியம். அத் தொடர் கண்ணியமிக்கவர்களாகவும். சுன்னத் வல் ஜமாஅத்தினர்களைச் சார்ந்தவர்களாகவும் உள்ளவர்களைக் கொண்டதாக இருப்பது அவசியத்திலும் அவசியம். கனவில் பெற்றதாக இருக்கக் கூடாது. வழித்

தொடர் உண்மையானதாக இருக்க வேண்டும். அப்போதுதான் தொடர்பு தம் ஷெய்கிலிருந்து முஹம்மத் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வரை சென்று அல்லாஹ்வை அடைய முடியும்.

நூரிஷாஹ்வின் தொடரை பார்போமேயானால், அவர் 8 தரீக்காவிற்கு கிலாபத் பெற்றவராகவும். தன்னை ஷெய்கு என்றும் கூறி வெளியிட்டுள்ளார். இவரின் சுஹரவர்திய்யா, நக்ஷபந்தியா தரீக்காக்களின் தொடர்களில் ஸெய்யிதினா அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களை அடுத்து அவர்களின் மகனார் ஸெய்யிதினா இமாம் ஹஸன் அடுத்து (அவர்களின் மகனார்) ஸெய்யிதினா இமாம் ஹுஸைன் அவர்களும் இடம் பெற்றுள்ளனர்.

உலகிலுள்ள எந்த ஸில்ஸிலாவிலும் இந்த வழிமுறை இல்லை. மற்றும் வரலாற்றுக் குறிப்புகளோ, ஆதாரங்களோ காணக்கிடைக்கவில்லை.

'தபகாத்திய்யா' சில் சிலாவில் 7, 8 வது தொடருக்குப் பின் நீண்டதொரு ஷெய்குமார்கள் இடைவெளி உள்ளது. அடுத்து, ஸில்ஸிலாயே அக்பரிய்யா உவைஸிய்யாவில் நூரிஷாஹ் 5வது ஷெய்காக வருகிறார். சுமார் 1430 வருடங்களுக்கு இந்த தரீக்காவில் 5 ஷெய்குமார்கள்தானா?

ஆக தங்களுக்கு தகுந்தவாறு ஸில்ஸிலா தொடர்களைத் தயாரித்துள்ளார் என்பதும், இந்த ஸில்ஸிலாக்கள் போலியானவை என்பதும் தெரியவருகிறது. அப்படியிருக்க, இந்த தொடரில் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

**அவர்களின் நிஸ்பத் எவ்வாறு கிடைக்கும்?**

இதில் மிக முக்கியமான விஷயம் யாதெனில், நக்ஷபந்தியா தொடரில் 39 தாவதாகவும். நக்ஷபந்தியா உவைஸிய்யா, அக்பரிய்யா தரீக்காக்களில் 31 வதாகவும் வரும் ஷைய்கு ஸையித் அஹ்மத் பரேலவீ என்பவர். இவரின் அடக்கஸ்தலம் பாலாகோட் (பஞ்சாப்) பில் இருப்பதாகவும் கூறப்பட்டுள்ளது.

**யார் இந்த ஸையித் அஹ்மத் பரேலவீ?**

இந்த ஸையித் அஹ்மத் பரேலவீ என்பவர் யார்? இவரின் கொள்கை என்ன? இவரின் மரணம் எப்படி சம்பவித்தது? இவருக்கு அடக்கஸ்தலம் இருப்பது என்று சொல்லப்பட்டது உண்மையா? என்று பார்க்கும் போது.

இவர் ஒரு பக்கா வஹ்ஹாபி ஆவார். தப்லீக் ஜமாஅத்தின் மூல குருவான மௌலவி இஸ்மாயில் திஹ்லவி என்பவர் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் ' கிதாபுத் தவ்ஹீது ' என்னும் வஹ்ஹாபிய சித்தாந்த நூலை " தக்வியத்துல் ஈமான் " என்ற பெயரில் மொழிபெயர்த்து இந்தியாவில் வெளியிட்டவர். இதில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி மிகத் தரக் குறைவாக விமர்சித்துள்ளார். மேலும் சுன்னத் வல் ஜமா அத்திற்கு மாற்றமான கொள்கைகளை எழுதியுள்ளார்.

**இஸ்மாயில் திஹ்லவியைப் பற்றிக் நூரி ஷாஹ்**

'இஸ்மாயீல் திஹ்லவி, ரஷீத் அஹ்மது கங்கோஹி போன்றோர் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் கொள்கைகளை பரப்ப தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்றும் இவர்களால் முஸ்லிம்களின் ஏகத்துவக் கோட்டை கலகலத்துவிட்டது ' என்றும் பேசியதை ஷைகுனா செய்யது நூரிஷாஹ், ஜ ஹ்ரி ஷாஹ் நினைவு மலர் (தொகுப்பு : கனி சிஷ்தி) பக்கம் 60,61ல் கூறப்பட்டுள்ளது.

இவரின் ஞான குருநாதர் மௌலவி ஸையித் அஹ்மத் பரேலவீ என்பவர்.இவருடன் இவரது சிஷ்யர் இஸ்மாயில் திஹ்லவியும் சேர்ந்து தங்களது வஹ்ஹாபியக் கொள்கைகளை முஸ்லிம்களிடையே பரப்பவும், ஆங்கிலேயே அரசிற்கு கூலியாக செயல்பட்டனர். இவர்களின் கொள்கைகள் மிக மோசமானதாக இருந்ததால் பட்டான் முஸ்லிம்களால் துண்டு துண்டாக வெட்டி கொல்லப்பட்டு தூர வீசப்பட்டனர்.

ஆனால் இவர்களை இந்த தரீக்காவினரும், தப்லீக் இயக்கத்தினர்களும் ' ஷஹீது ' என்கின்றனர். இவர்கள் ஷஹீதாவதற்கு முஸ்லிகளின் எதிரிகளோடு ஜிஹாத் செய்தார்களா? என்றால் இல்லை என்றே பதில் கிடைக்கிறது. மேலும் அப்போது சுதந்திரத்திற்காக பாடுபட்ட இந்தியர்களுக்கு எதிராகவும், ஆங்கிலேயே அரசுக்கு ஆதரவாகவும் செயல்பட்டனர் என்பதை இவர்கள் எழுதிய புத்தகங்களிலிருந்து எடுத்துக் காட்டி ' பாஸ்பான் ' எனும் பத்திரிக்கை ஆசிரியர் மௌலானா முஸ்தாக் அஹ்மத் சாஹிப் நிஜாமி (இலாஹாபாத்) அவர்கள் எழுதிய நூலான

' கூன்கே ஆன்ஸு ' (இரத்தக் கண்ணீர்) எனும் நூலிலிருந்து பார்த்தால் உண்மை புரியும். அதன் ஆதாரங்களை இங்கே தருகிறேன்.

1. ஸையத் சாஹிப்(ப்ரேலவியுடன் முஜாஹிதீன்கள் ஒன்று திரள ஆரம்பித்தனர். உடன் மௌலானா இஸ்மாயீல் (திஹ்லவி) உடைய ஆலோசனையின் பேரில் இலாஹாபாத்தைச் சார்ந்த செல்வந்தர் ஷைகு குலாம் அலியவர்கள் மூலம் தொடர்பு கொண்டு வடமேற்கு மாகாண லெப்டினட் கவர்னருடைய சமூகத்திற்கு நாங்கள் சீக்கியர்களுடன் ஜிஹாத் செய்ய ஆயத்தம் செய்து கொண்டிருக்கிறோம். இதில் ஆங்கிலேயே அரசுக்கு ஆட்சேபனை ஏதுமில்லையே! என்று கேட்டோம். அதற்கவர்கள்....எங்களின் செயல்திட்டம் மற்றும் அமைதிக்கு எவ்வித பங்கமும் ஏற்படாதிருக்குமேயானால் நமக்கு எவ்வித ஆட்சேபனையும் இல்லை என்று லெப்டினட் கவர்னர் சாஹிப் தெளிவாக எழுதிவிட்டார்.

நூல்:- ஹயாத்துத் தைய்யிபா பக்கம் 302 தொகுப்பு: மீர்ஜா ஹஸ்ரத் தெஹ்லவி.

இந்திய நாட்டை அப்போது ஆக்கிரமித்து அட்டூழியங்களும், கொடுமைகளும் செய்து கொண்டிருந்த ஆங்கிலேயே அரசை எதிர்த்து மார்க்கப்போர் புரிய இந்திய உலமாக்கள் பத்வா வெளியிட்டு களத்திலும் இறங்கி செயல்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் (அதற்காக மௌலானா பஜ்லுல் ஹக் ஹைதராபாதி ரஹ்மத்துல்லாஹ் அலைஹி போன்றோர் தம் இன்னுயிரை நீத்தனர்) ஆங்கிலேய அரசின் கைக்கூலிகளாக செயல்பட்டு வந்த இந்த ஸையித் அஹ்மத் பரேலவி, இஸ்மாயில் தெஹ்லவி போன்றோர் அவர்களின் அனுசரணை, தயவிற்காக கடிதம்

எழுதுகின்றனர் பாருங்கள். இந்த உதவியுடன் செய்யும் சண்டைகளை
' ஜிஹாத்' என்று சொல்லி ஜிஹாத்திற்கு புதுவிளக்கம் அளிக்கின்றார்கள் இவர்கள்.

2. ' கல்கத்தாவில் மௌலவி இஸ்மாயில் (தீஹ்லவி) ஜிஹாதைப் பற்றி பயான் செய்து கொண்டிருக்கும்போது, ஒருவர் எழுந்து நின்று, " நீங்கள் ஏன் ஆங்கிலேயர்களை எதிர்த்து ஜிஹாத் செய்ய பத்வா கொடுப்பதில்லை" என்று கேட்டார். அதற்கு மௌலவி இஸ்மாயில்....'
" ஆங்கிலேயர்களுடன் ஜிஹாத் செய்வதென்பது எவ்வகையிலும் வாஜிபில்லை.....அவர்கள் மீது எவரேனும் தாக்குதல் நடத்தினால் அப்படித் தாக்குவோரை எதிர்த்துப் போரிட வேண்டியது முஸ்லீம்களது கடமையாகும்..."
நூல் : ஹயாத்துத் தைய்யிபா, பக்கம் 296

இவர்களின் இந்த ஆங்கிலேய பாசம்தான் இவர்களை இஸ்லாமிய மார்க்கத்திற்கு எதிராக செயல்படத் தூண்டிற்று. அதனாலேயேதான் இஸ்மாயில் தீஹ்லவி ஹஜ் சென்றிருந்த சமயம் இப்னு அப்துல் வஹ்ஹாப் நஜ்தியின் ' கிதாபுத் தவ்ஹீது ' எனும் நூலை 'தக்வியத்துல் ஈமான் ' என்ற பெயரில் மொழிபெயர்த்து வெளியிட்டார். அதில் இஸ்லாத்திற்கு எதிரான கொள்கைகள் கூறப்பட்டிருந்தன.

இந்தக் கொள்கைகளை இஸ்லாமிய மக்கள் மத்தியில் பரப்பி ஒன்றுபட்டு போராடும் முஸ்லிம்களை சிதறச் செய்து பலவீனப்படுத்தி ஆங்கிலேயர்களுக்கு எதிராக கொடுக்கப்பட்ட ஜிஹாத் பத்வாவை பலமிக்கச் செய்வதுதான் இவர்களின் நோக்கமாக இருந்தது.

இதற்காக இவர்கள் ஊர்ஊர்ராக சென்றனர். அதற்கு ஆங்கிலேயே அரசும் உதவிக்கரம் பலவகையிலும் செய்து கொண்டே வந்தது.

## ஆங்கிலேயர் தேவ்பந்திகளுக்கு செய்த பொருள்உதவி

ஸையத் அஹ்மத் பரேலவிக்கு ஆங்கிலேயர் செய்த உதவி பற்றி அபுல்ஹஸன் அலி நத்வியால் எழுதப்பட்ட ' ஸீரத்தே ஸையத் அஹ்மத் எனும் நூலின் முதல் பாகம் பக்கம் 190ல் கூறப்பட்டுள்ளது.

" இதற்குள் குதிரை மீது சவாரி செய்த ஒரு ஆங்கிலேயன் சில பல்லக்குகளில் உணவுப் பொருட்களைச் சுமந்து கொண்டு (எங்கள்) படகிற்கருகில் வருவதைப் பார்த்தோம். அருகில் வந்த ஆங்கிலேயன்.....பாதிரிசாஹிப் எங்கேயிருக்கிறார்? என்று வினவினான். உடனே ஹஜ்ரத் அவர்கள் படகிலிருந்து நான் "இங்கே இருக்கிறேன்" என்று பதில் தந்தார்.

"......தங்களுக்காக சூரியன் மறையும் வரை உணவு தயாரிப்பதில் மும்முரமாயிருந்தேன்." இது கேட்ட ஸையத் சாஹிப் (பரேலவி) அவர்கள், கொண்டுவரப்பட்ட உணவுப் பொருட்களை தமது பாத்திரங்களுக்கு மாற்றுமாறு ஆணையிட, உணவு பெற்றுக் கொள்ளப்பட்டு கூட்டத்தினர்களுக்கு விநியோகிக்கப்பட்டது....

## ஆங்கிலேயர் தேவ்பத்திகளுக்கு செய்த பண உதவி

ஸையத் சாஹிப்(பரேலவீ) ஜிஹாதில் மும்முரமாய் ஈடுபட்டிருந்த நேரம் அப்போது டில்லியைச் சார்ந்த தனவந்தர்கள் மூலமாக முஹம்மது இஸ்ஹாக் என்பவரிடமிருந்து சையத் சாஹிபுடைய பெயருக்கு ஏழாயிரம் ரூபாய்க்கான ஒரு உண்டி (ஒருவகை செக் போன்றது) அனுப்பப்பட்டது...
நூல்: தாரீகே அஜீபாஹ், பக்கம் 89

இவ்வாறு பல்வேறு வழிகளில் பணமும், உணவும் இஸ்லாத்தைக் கூறுபோடும் பணியை செய்வதற்காக ஸையத் அஹ்மத் பரேலவிக்கு கிடைத்துக் கொண்டிருந்தது. மேலும் ஆங்கிலேய அரசின் ஆதரவும் இருந்தது.இந்த தைரியத்தில்தான் சையத் சாஹிப் சில காரியங்களைச் செய்தார். அவர் செய்த இஸ்லாத்திற்கு மாற்றமான காரியங்களை பார்ப்போம்.

## கப்ரை இடித்த தேவ்பந்த் வஹ்ஹாபிகள்

" நாங்கள் ஸையித் சாஹிப் அவர்களைத் தேடித்தேடி அலைந்து கொண்டே ஒருநாள் ஒரு கிராமத்திற்கு வந்து சேர்ந்தோம். அங்குள்ளோரிடம் விசாரித்தபோது, அவ்வூரில் இருந்த ஒரு பெரியாரின் கப்ருஷரீப் அப்போதுதான் இடித்துத் தள்ளப்பட்டிருந்ததை அறிந்தோம். உயரமாக கப்ரு இருந்த காரணத்தினால் ஸையத் சாஹிப் அவர்கள்தான் அதை இடிக்கச் செய்தார்கள் என்பதை தெரியவந்தபோது....... "
நூல்: அர்வாஹே ஸலாஸாஹ் பக்கம் 140

இவ்வாறு மகான்களின் கப்ருகளை இடித்து தரைமட்டமாக்கியவர் ஒரு தரீக்காவின் ஷெய்கு என்றால் எப்படி ஏற்றுக் கொள்வது? அந்த தரீக்காதான் எப்படி இருக்கும்?

தற்போது பார்த்தால் இந்த தரீக்காவின் ஷெய்குமார்களுக்கு உயரமான கப்ருகள்? கந்தூரிகள்? அதை கொண்டாடுவதற்குள் பிரச்சனைகள், கோர்ட் வரை செல்கின்றனர். என்னே! இவர்களின் கேடுகெட்ட கொள்கை இதுதான் நூரிஷாஹ் தரீக்காவின் இலட்சணம்.

ஜிஹாத் செய்யப்போகிறேன் என்று மார்தட்டி சென்ற இந்த ஸையத் சாஹிப் உண்மையில் ஜிஹாதை செய்தாரா? தப்லீக் ஜமாஅத்தின் ஸ்தாபகர் இல்யாஸ் மௌலவியின் குரு ரஷீத் அஹ்மத் கங்கோஹி தமது 'தத்கிரத்துர் ரஷீது' பாகம்– 2 பக்கம்– 270ல் 'அம்பேட்டவி நகரில் வசிக்கும் ஹாபிஸ் ஜானி என்பவர் தம்மிடம் கூறியதாக...." ஹஜ்ரத்மார்களும் ஸைய்யித் சாஹிபுடன் சேர்ந்து ஜிஹாதுக்காக சென்று கொண்டிருந்தனர். பாகிஸ்தானுடைய அதிகாரி ' யார் முஹம்மது கான்' என்பவருடன் ஸையத் சாஹிப் அவர்கள் முதன்முதலாக ஜிஹாத் செய்தனர் என்று கூறினார்.

இதே வாசகங்கள் ஸீரத்தே ஸையத் அஹ்மத் (ஆசிரியர்: அபுல்ஹஸன் நத்வி) பாகம் 1, பக்கம் 190ல் காணக்கிடக்கிறது.

இஸ்லாமியர்களுடன் அதுவும் சுன்னத் வல் ஜமாஅத்தினர்களுடனும், தங்களது கொள்கையை ஏற்காதவர்களுடன் சண்டை செய்வதை தான் இவர்கள் ஜிஹாத் என்கின்றனர். இதுதான் வஹ்ஹாபிகளின் தலைவன் முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபின் கொள்கை இதற்காகத்தான் இவர்கள் பாடுபட்டார்கள்.

'ஸையத் அஹ்மத் மற்றும் மௌலவீ இஸ்மாயீல் திஹ்லவியும் 'பீச்தார் எனும் இடத்தில் போய் சேர்ந்தபோது, அங்குள்ள தனவந்தர் 'பதஹ்கான் என்பவர் துவக்கத்தில் இவர்களுக்கு மிகவும் மரியாதை பணிவிடை செய்து வந்தார். இவர்களும் சிறிது நாட்கள் வரை அங்கேயே தங்கியிருந்தனர். ஆனால் நாளடைவில் இவர்களிருவரும் அங்குள்ளோரிடம் அநியாயமும், அக்கிரமும் செய்ய ஆரம்பித்தனர். அங்கு வாழ்ந்த மக்களை தீய நெறி கொண்டோரென்றும், தீய மார்க்கமுடையோரென்றும் கூறத் துவங்கினார். நிலைமை மிகவும் மோசமாகவே இவர்களிருவரையும் அதே ஸ்தலத்தில் பட்டான்கள் தீர்த்து விட்டனர். தமது அக்கிரம அழிச்சாட்டியத்தால் அவ்விருவரும் பட்டான்களால் கொல்லப்பட்டனர்.

(நூல் : கூன்கேஆன்ஸூ முதல்பாகம் பக்கம்36)

கேடுகெட்ட கொள்கைக்காக ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களை இழிவுபடுத்தியதற்காக கொல்லப்பட்ட இந்த கேடுகெட்ட ஸைய்த் அஹ்மத் பரேலவீ ஒரு தரீக்காவின் ஷெய்கு என்றால் எப்படி ஏற்றுக்கொள்ள முடியும்?

இவ்வாறு இருக்கும் தரீக்கா சுன்னத் வல்ஜமாஅத் தரீக்காதானா? சிந்தித்துப் பாருங்கள்.

ஆக நூரிஷாஹ்வின் தரீக்கா போலியானது என்பதும், மக்களை ஏமாற்ற தயாரிக்கப்பட்ட ஸில்ஸிலாவைக் கொண்டது என்பதும் வழிகெட்ட தலைவர்களை குருமார்களாக கொண்டது என்பதும் மேற்கண்ட ஆதாரங்கள் மூலம் புலனாகிறது. ஆக இத் தரீக்காவில் பொதுமக்கள் சேருவது கூடாது என்று கொடுக்கப்பட்ட பத்வாக்கள் சொன்னது உண்மை என்றாகிறது.

நூரிஷாஹ் தரீக்காவின் ஷெய்கான கௌஸி ஷாஹ் என்பவர் எழுதியதாக கூறப்படும் 'நூருன்னூர்' எனும் நூலின் பக்கம் 9ல், 'தப்லீக் ஜமாஅத்தின் மூல குருமார்களில் ஒருவரான, மக்கா, மதீனா உலமாக்களால் 'காபிர்' என்று முத்திரை பத்வா கொடுக்கப்பட்டவரும், மீரட் மௌலானா அப்துல் ஹலீம் சித்தீகி ரலியல்லாஹு அன்ஹு அவர்களால் (அல் இம்தாது எனும் பத்திரிகையில் தன்னை ரஸூல் என்று தாவா செய்த அவரின் தீயக் கொள்கை பற்றி விசாரிக்கப்பட்டு அதற்கு அவர் பதில் தராமல் தான் கொண்ட கொள்கையிலேயே உறுதியாக இருந்ததால்) காபிர் என்று பத்வா கொடுக்கப்பட்டவரும், ஹிப்ளுல் ஈமான் என்ற நூலில் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவை பேயன், பைத்தியக்காரன், மதலைக் குழந்தைகளின் அறிவோடு ஒப்பிட்டுப் பேசியவரும் இன்னும் அவர் எழுதிய பல்வேறு நூல்களில் நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களைப் பற்றி மிகவும் தரக்குறைவாக

விமர்சித்தவருமான மௌலானா அஷ்ரப் அலிதானவி என்பவரைப் பற்றி மிகவும் போற்றிப் புகழ்ந்து எழுதியது மட்டுமில்லாமல். அவருக்கு ரஹ்மத்துல்லாஹி அலைஹி என்று துஆவும் கேட்டுள்ளார்.

## திருந்தாத அஷ்ரப்அலி தானவி

தன்னுடைய குருவை பின்பற்றி சிஷ்யரான நூரிஷாஹ்வும் 'இறைவனுடைய காதலை விட மஜ்னூன் காதல் பெரிதா? என்ற தலைப்பின் கட்டுரையில் அஷ்ரப்அலி தானவிற்கு கொடுக்கப்பட்ட காபிர் பத்வா போலி என்றும், ஷம்சு தப்ரேஜ், ஹஜ்ரத் ஜுனைதுல் பக்தாதி போன்றோர்களுக்கு கொடுக்கப்பட்டதைப் போல் இவருக்கும் பத்வா கொடுக்கப்பட்டது என்று " ஷைகுனா செய்யிது நூரி ஷாஹ் ஷைகுனாஜுஹூரி ஷாஹ் நினைவுமலர் " பக்கம் - 42ல் எழுதியுள்ளார்.

ஷம்சுத் தப்ரேஜ், ஜுனைதுல் பக்தாதி நாயகங்கள் ரலியல்லாஹு அன்ஹுமா போன்றோருக்கு எப்போது பத்வா கொடுக்கப்பட்டது? நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அவர்கள் தரக்குறைவாக விமர்சித்தார்களா? தங்களை ரஸூல் என்று வாதித்தார்களா? (நவூதுபில்லாஹி மின்ஹா) எதை எதோடு ஒப்பிட்டுப் பேசுகிறார் பாருங்கள், இந்த மார்க்கம் தெரியாதவர்.

இதுபற்றி கேட்டால் அஷ்ரப் அலி தானவி திருந்திவிட்டார் என்றார்கள். அதற்கு ஆதாரம் தாருங்கள் என்று அஹ்லெ சுன்னத் மாத இதழ் மூலம் கேட்டு சுமார் 15

வருடங்கள் ஆகிவிட்டது. இன்றுவரை அவர்களால் தரமுடியவில்லை. இருந்தால்தானே தருவதற்கு. இன்றுவரை அஷ்ரப் அலி தானவி எழுதிய அந்த கேடுகெட்ட புத்தகங்கள் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. அதுவும் அவருடைய சில்சிலா கலீபாக்களால். இவ்வாறிருக்க இந்த அஷ்ரப் அலி தானவியை ஏற்ற இந்த தரீக்காவை நாம் எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்?

## தப்லீக் ஜமாத்தில் பைஜிஷாஹ்

வஹ்ஹாபி தாய் 8 அடி பாய்ந்தால் குட்டி16 அடி பாயும் என்பது பழமொழி. நூரிஷாஹ்வின் கலீபாவான லால்பேட்டை பஷீர் மௌலானா ஷெய்கு பைஜி ஷாஹ்வின் நிலையை பார்க்கப்போனால், ஷைகுனா செய்யிது நூரி ஷாஹ் ஷைகுனா ஜுஹுரிஷாஹ் நினைவு மலர் எனும் நூலில் அவரது வாழ்க்கை சரித்திரத்தை கூறும்போது பக்கம் 123ல், கோட்டைக்குப்பம், நெல்லிக்குப்பம், பாண்டிச்சேரி, கடலூர், திண்டுக்கல் போன்ற தப்லீக் இஜ்திமாக்களில் பிரதான பேச்சாளராகஇடம் பிடித்தார்.'

'நூருன்னூர்' எனும் நூலின் பக்கம் 11ல் பைஜி ஷாஹ் தப்லீக் இயக்கத்தில் சேர்ந்து 19 வருடங்கள் சேவை செய்தார்கள். என்ற பெருமையாக கூறப்பட்டுள்ளது. தப்லீக் ஜமாஅத் ஒரு வழிகெட்ட இயக்கம் அதில் சேரக்கூடாது என்று சுன்னத் வல்ஜமா அத் உலமாக்கள் பத்வா வெளியிட்டிருக்க இவர் அதில் சேர்ந்து 19 வருடங்கள் பணியாற்றினார் என்று சொல்லப்படுவது இவரின் கொள்கை எத்தகையது என்பதனை விளக்குகிறது. அதே நூல் பக்கம்- 11ல்

" ஆரம்பத்தில் சென்னையில் வாழ்ந்த ஷைகுநாயகம் பின்னர் லால்பேட்டைக்கு ஹிஜ்ரத் செய்தனர் என்றும் கூறியதன் தாத்பரியம் என்ன?
ஹிஜ்ரத் என்றால் என்ன? என்று கூட விளங்காமல் உளறி கொட்டியிருக்கின்றனர்.

மேலும் தாய், தந்தை சொல்லிற்கு கட்டுபட்டு நடக்கவேண்டியவர்களையும், தனது கட்டுப்பாட்டிற்குள் வசியம் செய்து வைத்ததையும், பலருக்கு கட்டப் பஞ்சாயத்து செய்து வந்ததையும் ; ஷெய்குனா செய்யிது நூரிஷாஹ் ஷெய்குனா ஜுஹுரி ஷாஹ் நினைவு மலர் " பக்கம் -123, 127ல் கூறியிருப்பது இவரின் கீழ்த் தரத்தையே காட்டுவதாக அமைந்துள்ளது.

## அம்பா நாயகம்பேரில் அண்டப்புளுகு

கடையநல்லூரைச் சார்ந்த எம்.எஸ் அப்துல் காதிர் பாகவி என்ற ஜனிஷாஹ் என்பவர் 'திருக்கலிமாவின் பொக்கிஷம் (பைஜானே ஷைகீ) எனும் நூலில் அணிந்துரை எனும் பகுதியில் கம்பம் அம்பா நாயகம் அவர்கள் இந்த நூலை மதித்து அணிந்துரை வழங்கியிருப்பதாகவும் அவர்கள் எழுதிய சில வாசகங்களை சொல்லி எழுதியிருப்பதாகவும் சில பொய்களை எழுதி புத்தகத்தை அம்பா நாயகம் அவர்கள் மறைந்த பிறகு வெளியிட்டுள்ளார்.

ஆனால், உண்மை என்னவென்றால் இந்த அணிந்துரையை அம்பா நாயகம் அவர்கள் எழுதவோ சொல்லவோ இல்லை.இதை நிரூபிக்கும் விதமாக,

இந்நூலைக் கண்ணுற்ற அம்பாநாயகம் அவர்களின் மகனார் மௌலவி அப்துல் கபூர் ஸயீதி அவர்களும், அம்பா நாயகத்தின் முரீது கிருஷ்ணாபட்டனம் மௌலவி ஜவாஹிர் ஹுஸைன் ஆலிம்மன்பயி அவர்களும் நேரடியாக அப்போது பொரவாச்சேரி மத்ரஸாவில் பணியாற்றிக் கொண்டிருந்த எம்.எஸ் அப்துல் காதிர் பாகவி அவர்களிடம் சென்று," நீங்கள் இந்த புத்தகத்தில் அம்பாநாயகம் அவர்கள் அணிந்துரை எழுதியிருப்பதாக எழுதியிருக்கிறீர்கள். அதை நாங்கள் பார்க்க இயலுமா? என்ற போது, அவர் மழுப்பலாக, 'அவர்கள் சொல்ல நான் எழுதியதில் அவர்கள் கையொப்பமிட்டார்கள்; என்று சொன்னார். அவர்களிருவரும் 'சரி அந்த கையெழுத்தையாவது காட்டுங்கள்' என்று கூறிய,உடன் அவர் சும்மா தேடுவது மாதிரி நடித்துவிட்டு 'தற்போது இல்லை' என்று சொல்லவும், 'நீங்கள் இதற்கு மறுப்பு வெளியிட வேண்டும்'; என்று அவர்கள் இருவரும் சொல்லிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றார்கள் அம்பாநாயகத்தின் மகனாரும் அவர்களுடன் சென்ற மௌலவி அவர்களும் இன்றும் இருக்கிறார்கள். நடந்த சம்பவத்தை நேரில் கேட்டுக் கொள்ளலாம். இவ்வாறு பொய்களையும் புரட்டுகளையும் சொல்லி தம்மை வளர்த்துக் கொள்வதில் மட்டுமே கவனம் செலுத்தும் இவர்கள் மார்க்கத்தையும், இஸ்லாமிய ஞானத்தையும் எங்ஙனம் வளர்ப்பார்கள்?

கம்பம் அம்பா நாயகம் அவர்களிடம் பைஜி ஷாஹ் எப்படிப் பட்டவர்? அவரின் ஞானம் எப்படி? அஷ்ரப் அலி தானவியை ஒப்புக் கொள்கிறார்களே! என்று கேட்ட கேள்விக்கு," பைஜி ஷாஹ் வின் ஞானம் சரியில்லை. நமது ஷெய்குமார்கள் சொன்ன ஞானமாக இல்லை. அஷ்ரப் அலி

தானவியை ஏற்றுக் கொண்ட யாரும் சுன்னத் வல் ஜமாஅத்தாக இருக்க முடியாது என்று பதிலளித்தார்கள். இந்தப் பேச்சின் ஒலிப்பதிவு நாடா பலரிடமும் இருக்கிறது.

இதே ஜனிஷாஹ் என்பவர்தான், 'தப்லீக்கும் அதன் தலைவர்களும்' என்ற புத்தகத்தை எழுதி அதில் அஷ்ரப் அலி தானவியின் கேடுகெட்ட கொள்கைகளை விமர்சித்து, அவரின் மேல் விடப்பட்ட குப்ரு பத்வாவையும் எடுத்துக் காட்டியவர். பின்னர் என்ன நடந்ததோ? தெரியவில்லை.

## ஜமாலீஷா முகத்திரை கிழிந்தது :

பொரவாச்சேரியில் பணியாற்றிய அப்துஸ்ஸலாம் மௌலவி என்ற ஜமாலிஷாஹ் என்பவர் தப்லீகின் தலைவர்களுள் ஒருவரான மௌலானா ஜகரிய்யா சாஹிபை போற்றிப் புகழ்ந்தும், அவர் மத்ரஸாவில் தான் ஓதியது பெரும் பாக்கியம் என்றும், அஷ்ரப் அலி தானவியை ஒரு மகான் என்றும் போற்றி புகழ்ந்தும் ஒப்புதல் வாக்குமூலம் அளித்ததை அஹ்லெ சுன்னத் மாத இதழ் ஜனவரி 1996 வெளிச்சம் போட்டுக் காட்டி ஜமாலி ஷாஹ்வின் முகத்திரையை கிழித்தது உங்களுக்கு நினைவிருக்கலாம்.

## முரண்பாடும் - பலனும்:

இதே போன்றுதான் அஷ்ரப் அலி தானவி வழிகெட்ட தப்லீக் ஜமாஅத்தின் மூல குருமார்களுள் ஒருவர் என்று நூரிஷாஹ்வின் பிரதம சீடர் முஸ்லிம் குரல் ஆசிரியர் கனி சிஷ்தி கூறியிருப்பதையும் அஹ்லெசுன்னத் பத்திரிக்கை வெளியில் கொண்டுவந்தது குறிப்பிடத்தக்கது.

குருமார்களும், சிஷ்யர்களும் இவ்வாறு ஒன்றுக்கொன்று முரண்பட்டு பைத்தியக்காரத்தனமாக உளறிக் கொட்டுவதற்கு என்ன காரணம்? என்றும் அவர்களின் நோக்கம் என்ன? என்றும் தெரியவேண்டுமானால், 'ஷைகுனா செய்யிது நூரிஷாஹ் ஷைகுனா ஜுஹ்ரி ஷாஹ் நினைவு மலர்' என்ற நூலில் உள்ள ஒரு சம்பவம் உங்களுக்கு அதை தெரியப்படுத்தும். அது இதுதான்:

'சர்காரின் (நூரிஷாஹ்) முரீதான டிரைவர் ரெயலி ஓட்டும்போது தண்டவாளத்தில் பெரிய மிருகம் இருப்பதை பார்த்ததாகவும், அதன்மீது மோதினால் பெரிய விபத்து நடந்திருக்கும் என்று எண்ணியதாகவும் ஒன்றுமே புரியாத நேரத்தில் சர்க்காரே வந்து எதிரில் தோன்றினார்கள். அப்படியே வண்டி நின்று விட்டது.

அப்போதுதான் எனக்கு மனதில் ஒரு ஊசல், கடந்த மாதம் நான் ஷெய்குனாவுக்கு சேர்க்க வேண்டியதை சேர்க்கத் தவறிவிட்டேன் என்றும் அதை ஷெய்குனாவிடம் அந்த முரீது சொன்னார். அதற்கு சர்கார் கிப்லா சொன்னார்கள் " புரிந்து கொண்டால் சரி. "

நூல்: ஷைகுனா செய்யிது நூரிஷாஹ் ஷைஹ் ஷைகுனா ஜுஹ்ரி ஷாஹ் நினைவு மலர், பக்கம் 43.

உங்களுக்கு இதன் அர்த்தம், தாத்பரியம் இந்த சம்பவத்தின் மூலம் தெரிந்திருக்கும். முரீதுகள் ஷெய்குமார்களுக்கு மாதமாதம் கப்பம் செலுத்துவதும் இதற்காகத்தான் இவர்கள் ஸில்ஸிலா தயாரித்து, தரீக்கா

என்ற பெயரில் ஒன்றை நடத்துகிறார்கள் என்றும் தெரியவந்திருக்கும்.

நூரிஷாஹ்விடம் அதிக நெருக்கமாக இருந்தவரும், பிலாலி ஷாஹ் என்பவருடைய ஷெய்காய் இருப்பவருமான ஜுஹூரி ஷாஹ் என்பவரின் வாழ்க்கையை, ஷைகுனா செய்யிது நூரிஷாஹ் ஷைகுனா ஜுஹூரி ஷாஹ் நினைவு மலர் (இந்த மலரை தொகுத்தவர் நூரிஷாஹ்வின் பிரதம சீடர் கனி சிஷ்தி என்பவர்) என்ற நூல் பக்கம் 100–ல் வர்ணிக்கிறது. காயலான் கடை வைத்து அதன்மூலம் கள்ள சரக்குகளை வாங்கி வந்ததன் காரணமாக பலமுறை பல்வேறு சங்கடங்களில் சிக்கிய சம்பவங்கள் நமது யூசுப் ஹழரத் எனும் ஜுஹூரி ஷாஹ் கிப்லா அவர்களின் வாழ்க்கையில் நடந்துள்ளது'.

ஆக முரீதுகள் முதல் ஷெய்குமார்கள் வரை அனைவர்களின் வாழ்க்கையையும், கொள்கைகளையும் உங்கள் கண்முன் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இதுதான் இந்த தரீக்காவின் நிலை.

சிலர் சொல்கிறார்கள். " இந்த தரீக்காவிலுள்ள இந்த ஷாஹ் தப்லீகை எதிர்க்கிறார். ரஸூலின் முஹப்பத்தைப் பற்றி அழகாக பேசுகிறார். எனவே அவரை மட்டும் நாங்கள் பின்பற்றுகிறோம் " என்று, இந்தக் கூற்று மிகவும் மோசமான கூற்றாகும். ஏனெனில் இவர்களின் தலைவர்கள், ஷெய்குமார்கள் அனைவர்களும் நமது உயிரினும் மேலான நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை மோசமாக பேசியும், எழுதியும் வந்தவர்களை ஆதரித்து பேசுவது மட்டுமில்லாமல் அவர்களை மகான்கள் என்றும் கூறுகின்றனர். இப்படிப்பட்டவர்களின் தொடர்பு கொண்ட தரீக்காவில் இருக்கும் வரை யாரையும் சுன்னத் வல் ஜமா அத்தினர்கள்

ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

**தீவிரவாத போக்கு ...**

மேலும் பாருங்கள்! வஹ்ஹாபிகள் தங்களது தீவிரவாத போக்கை உலகிற்கு காட்டியது தற்போது பத்திரிகைகளில் வெளிவந்து அவர்களின் உண்மை முகம் அம்பலமாகிக் கொண்டிருக்கிறது. இச்சமயத்தில் இந்த வஹ்ஹாபி தரீக்காவான நூரிஷாஹ் தரீக்காவைச் சார்ந்த மௌலவி அப்துல் நாஸர் மதானி என்பவரின் தீவிரவாதப் போக்கு தற்போது பத்திரிகையில் வெளிவந்துள்ளது. அதனைப்பார்வையிட : http:/timesofindia.indiatimes.com/citv/banggalore/Madani-reveals-he-was-member-of-Hyderabad-terror-outfit/articleshow/6435291.cms

## நூரிஷாஹ் தரீக்காவின் மெய் (அஞ்)ஞானமும், ஸூபிகளின் மெய்ஞானமும் :

தங்களின் முரீதுகளால் ஷம்சுல் ஆரிபீன் என்று புகழப்படும் நூரிஷாஹ், 'காதிரிய்யா, சிஷ்திய்யா தரீக்காவிற்கு தன்னை ஒரு ஷைகு என்பதாகக் கூறிக் கொண்டு கேரளாவில் நுழைந்தார். பொதுமக்களும் சில உலமாக்களும் அவரை அங்கீகரித்தனர். மக்களின் மனதில் நல்ல மதிப்பை பெற்ற பின்னர், 'தரீக்கத்தே நூரிய்யாஹ்' என்ற ஒரு தரீக்காவிற்கு தான் தனியொரு ஷைகு என்பதாக தாவா செய்தார். தம்மை பின்பற்றிய பிரத்தியேகச் சீடர்களுக்குப் பற்பல தவறான கருத்துக்களை போதித்தார். அவை அல்லாஹ்வுடைய வாக்கு என்றும், தான் அல்லாஹ்வின் தானமென்றும் அல்லாஹ்வுடைய கலாம் என்றும், அவனுடைய தூதரின் நிழல் என்றும் வாதித்தார்'.

(ஆதாரம்: ஆயங்குடி பிரசுரம் 15.5.1977)

இவ்வாறு அறிமுகம் கொடுக்கப்பட்ட நூரிஷாஹ்வின் ஞானம், மஃரிபா சரியானதுதானா? நமது மகான்கள் சொன்னதுதானா? என்று பார்க்கும்போது, கம்பம் அம்பா நாயகம் அவர்கள் சொன்ன சொல் நமக்கு ஞாபகத்திற்கு வருகிறது. அது, அவர்களின் ஞானமே சரியில்லை' என்பதுதான்.

மெய்ஞ்ஞானத்தைப் பற்றி தெரிந்த மற்ற ஷெய்குமார்கள் சொல்கிறார்கள், 'மெய்ஞ்ஞானத்தைப் பற்றி சரியாக தெரியாமல் உளறும் வார்த்தையாகத்தான்; இருக்கிறது. இது ஞானமே இல்லை' என்று.

ஆனால் இவர்கள் சொல்கிறார்கள், நாங்கள் சொல்லும் ஞானமே சரியானது. மற்றவைகள் தவறானது மட்டுமில்லாமல் மற்ற வஹ்தத்துல் வுஜூது கொள்கையைப் போதிக்கும், ஷெய்குமார்கள் தவறிழைத்துவிட்டார்கள்.காயல்பட்டணம் தைக்கா சாகிபு வலியுல்லாஹ் சறுகிவிட்டார்கள். ஹைதராபாத் ஸூபி ஹஜ்ரத் அவர்கள் கைரியத்து, ஐனியத்து தெரியாமல் இருக்கிறார்கள்.. ஷிர்க் செய்து விட்டார்கள். (நவூதுபில்லாஹி மின்ஹா) என்பது போன்ற தவறான செய்திகளை உளறிக் கொட்டுகிறார்கள். தாங்கள் போதிக்கும் தவறான ஞானத்தை வஹ்தத்துல் வுஜூது' என்றும் சொல்கிறார்கள்.

இவர்கள் போதிக்கும் ஞானம் வஹ்தத்துல் வுஜூது என்றால், வுஜூதைப் போதித்த கௌதுல் அஃலம், அப்துல் கரீம் ஜியலி, முஹ்யித்தீன் இப்னு அரபி, அப்துல் வஹ்ஹாப் ஷஹ்ரானி, ஷாஹ் வலியுல்லாஹ், ஆலா ஹஜ்ரத்பரேலவி ரலியல்லாஹு அன்ஹும் போன்ற எண்ணற்ற மகான்கள் இவர்கள் சொல்லியபடி எங்காவது. எந்த கிதாபிலாவது

போதித்திருக்கிறார்கள், எழுதியிருக்கிறார்கள் என்று இவர்களால் ஆதாரத்துடன் சொல்ல முடியுமா? அவர்கள் சொன்ன சொல்லிற்கு இவர்கள் தான்தோன்றித்தனமாக வலிந்துரைகள் செய்திருக்கிறார்கள். இந்த வலிந்துரைகள் மகான்களில் கூற்றுகளுக்கு மாற்றமானவைகளாகும். இவர்களின் ஞானத்தின் சூனியத்தைப் பாருங்கள்:

கௌஸி ஷாஹ் சிஷ்தி காதிரி எழுதியதாக 'நூருன்னூர்' என்ற நூலில் இவர்கள் வெளியிட்ட புதிய ஞானம் பற்றிய வரிகள்:

'வுஜூது ஒன்றாகவும், தாத்து இரண்டாகவும் இருக்கிறது. ஒன்று மவ்ஜூதே ஹகீகிய்யான தாத் இன்னொன்று மவ்ஜூதே இளாபிய்யான தாத். (பக்கம் 76)

அவனோ அவைகள் தாத்திலே வேறானவை. உஜூதிலே ஒன்றானவை என்று அறிகிறான் (பக்கம் 69)

'உஜூதே முத்லக்தான் ரப்புடைய தாத்து. அது தானல்லாத இன்னொரு தாத்தான அப்துடைய தாத்தை தன்னில் காட்டுகிறது என்று கூறினால் அது சரிதான். (பக் 102)

ஹக்குக்கும் ஹல்குக்கும் உதாரணம் கூறும்போது கடலும் அலையும் போல என்றும், தண்ணீரும் பனிக்கட்டியும் போல என்றும்....சில விஷயங்களை விளக்குவதற்காகக் கூறியுள்ளார்கள்....அவர்களின் உதாரணங்களை அப்படியே நம்பிக் கொண்டு வழி தவறி விடுகிறார்கள். (பக் 117)

இவர்கள் கூறுவதிலிருந்து வுஜூது ஒன்று, தாத்து இரண்டு என்றும் ஹக்கிற்கும், கல்கிற்கும் கொடுக்கப்படும் உதாரணங்கள் கடலும் அலையும், தண்ணீரும் பனிக்கட்டியும் என்பது தவறானவை என்றும் வாதிக்கிறார்கள்.

நமது ஷெய்குமார்கள், மகான்கள் சொல்லும் ஞானத்திற்கு முற்றிலும் மாறுபட்டதாகவும். வழிதவற செய்யக்கூடியதாகவும் இருக்கும் இவர்களின் கூற்றை ஏற்றுக் கொண்டவர்களுக்கு ஏற்படும் தவறுகள் மற்றும் அபாயங்கள் பற்றி இங்கே ஹைதராபாத் ஸூபி மகான் குத்புஜ் ஜமான் மௌலவி முஹம்மது அப்துல் காதிர் ஸூபி ஹஜ்ரத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் எழுதிய 'அல்ஹகீகா'(தமிழில்: மௌலவி அஸ்ஸெய்யிது ஜலாலுத்தீன் பூக்கோயா தங்கள் ஸூபி ஹழ்ரத் ரலியல்லாஹு அன்ஹு) என்ற நூலில் விளக்கம் தந்திருப்பதை எடுத்துக் காட்டுகிறேன்.

தாத், உஜூது என்ற இரு பெயர்கள் ஒரே அர்த்தத்தை கொடுக்கக் கூடியன. எதன்பேரில் சிபாத்துக்கள் சேர்க்கப்படுமோ அதற்கு தாத்து என்று பெயர் வைப்பதை ஸூபியாக்கள் வழக்கமாக்கிக் கொண்டார்கள்.

ஹகீகிய்யான உஜூதாகிறது தாத்தாகும். ஹகீகிய்யான தாத்தாகிறது உஜூதாகும். சில அனுபவ அறிவில்லாதவர்கள் ஊகித்தைப் போல ஹகீகிய்யான உஜூதாகிறது தாத்திற்கு மேலதிகமானதாக இல்லை.

உஜூதாகிறது அவர்களின் யூகத்தின் படி தாத்தை விடஅதிகமானதாக ஆகியிருக்குமானால். தாத்தானது தன்னுடைய தாத்தின் மர்தபாவில் அது தனித்து இல்லாததாகவும், உஜூதின் பக்கம் தேவைப்பட்டதாகவும் ஆக வேண்டிய வரும். ஆகவே தேவைப்பட்ட பொருள் இலாஹாக இருப்பதற்கு தகுதியற்றதாகும்.

**16-12-1974 K.K. அபூபக்கர் முஸ்லியார் அவர்களின் தலைமையில் (ஸமஸ்த கேரளா ஜம்யிய்யத்துல் உலமா) அலுவலகத்தில் கூடி ஆலோசிக்கப்பட்ட தீர்மானம்.**

நூரிஷாஹ் தரீக்காவைப்பற்றி கீழ்காணும் தீர்மானங்கள் நிறைவேற்றி வெளியிட முடிவு செய்யப்பட்டது.

ஹைதராபாத்தைச் சார்ந்த நூரிஷாஹ் உடைய பெயரில் அவருடைய கலீபாக்கள் (பிரதிநிதிகள்) கேரளாவில் நடத்தி வரும் தரீக்காவின் வெளியீடு சம்பந்தமாக பொட்யார இருங்காட்டிரி, மாம்புழா, போன்ற ஊருடைய மஹல்லாக்களிலிருந்து கேட்கப்பட்ட கேள்விகளில் விபரித்த விஷயங்கள் சம்பந்தமாகவும்.

ஸில்ஸிலதுன்நூரிய்யா கேரளா என்னும் சங்கம் வெளியிட்டுள்ள அஹ்ம்மியது தரீக்கா மஜ்லிஸுகுலபா நூரிய்யாவின் நிபந்தனைகளும் சட்டங்களும் என்பவைகளைப்பற்றியும் (சமஸ்த கேரளா ஜம்யிய்யத்துல் உலமா) இன்று கூடி ஆலோசனைக் கூட்டம் நடத்தி மிக நுணுக்கமாக ஆய்வுகள் செய்தது.

மேற்படி நூல்களில் அடங்கி இருக்கும் விஷயங்களில் கேள்விகள் கேட்கப்பட்டது போல் பல விஷயங்கள் இஸ்லாம் மார்க்கத்தின் ஷரீ அத்திற்கு மாற்றமானது, என ஆலோசனை கூட்டம் தீர்மானிக்கிறது. அதனால் இந்த தரீக்காவை விட்டும் பொதுமக்கள் ஒதுங்கி (ஈடுபடாமல் இருக்குமாறு (இம் மஜ்லிஸ்) உபதேசிக்கின்றது.

# பைஜ்ல் இஸ்லாமா? பாவங்களின் பிறப்பிடமா?
## (அஹ்லெ சுன்னத் செப்டம்பர்மாத இதழ் 1995)

ஒரு தரீக்காவை ஏற்று ஷைகாக வழிநடத்தும் யாராக இருந்தாலும் அவர் அல்லாஹ் மற்றும் அவனது ரஸுலின் எல்லையில்லா நேசத்தை தன்னகத்தே கொண்டவராயிருக்க வேண்டும். இது ஞானவான்களின் வழிப்பாட்டையான சில்சிலாவை ஏற்று வழி நடத்துவோருக்கு இன்றியமையாத ஒரு கட்டாயக் கடமையாகும்.

கிட்டத்தட்ட தமிழகத்தில் ஐம்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் முஸ்லிம்களுக்கிடையேயான ஒரு குழப்பமான சூழலில் புனித மார்க்கத்தின் புராதனமான இஸ்லாமியக் கொள்கையாகிய அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்ட தப்லீக்வாதிகள். தேவ்பந்திகள், ஜமா அத்தே இஸ்லாமிகள், நஜாஸத்துகள் போன்றோரின் குழப்பக் கருத்துக்களால் தமிழக முஸ்லிம்கள் தடுமாறிக் கொண்டுள்ள இவ்வேளையில்....

ஒரு முஸ்லிம் அல்லாஹ் மற்றும் அவனது ரஸுலின் நேசத்தை மட்டும் காரணமாகக் காட்டி தம்மை ஒரு உண்மையான சுன்னத் வல் ஜமா அத் கொள்கையைச் சார்ந்தவர் என்று நிருபிக்க முடியாது. காரணம் வழி கெடுப்போரும் தாங்களும் அல்லாஹ், ரசூலை நேசிப்பதாகக் கூறித்தான் வழி கெடுக்கின்றனர்.

இந்நிலையில் அல்லாஹ், ரஸூலின் மீது கொண்டுள்ள நேசம் மட்டும் ஒருவரை சுன்னத் வல் ஜமா அத் கொள்கையைச் சார்ந்தவர் என்பதற்கு ஆதாரமாகாது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அவ்வாறாயின் ஒருவர் தம்மை சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவர் என்று ருஜுப்படுத்துவதற்கு வேறு ஆதாரமொன்றும் தேவைப்படுகிறது. அது என்ன தெரியுமா? அல்லாஹ் மற்றும் அவனது ரஸூலின் விரோதிகளை தனது விரோதியாக எண்ணி வெறுப்பதாகும். இன்று இந்த ஆதாரத்தை கொண்டுதான் ஒருவர் சுன்னத் வல் ஜமா அத்தை சார்ந்தவரா? இல்லையா? என்று தீர்மானிக்கப்படுகிறார். இதைப் பற்றி அல்லாஹ் திருமறையில்,

" யார் அல்லாஹ்வுக்கும் இன்னும் அவனது மலக்குகளுக்கும் இன்னும் ஜிப்ரயீலுக்கும் இன்னும் மீக்காயீலுக்கும் விரோதியாக இருக்கின்றார்களோ, திடனாக அவர்கள் அல்லாஹ்வை நிராகரிக்கின்ற விரோதிகள் " என்று கூறுகின்றான்.

பரேலியிலுள்ள ஷைகுமார்கள் மட்டும் தான் சுன்னத் வல்ஜமா அத் கொள்கைக்கு சொந்தக்காரர்களா? தமிழகத்திலுள்ள ஷைகுமார்கள் சுன்னத் வல் ஜமாத் கொள்கை கொண்டவர்கள் இல்லையா? என்று பைஜுல் இஸ்லாம் ஆசிரியர் கேள்வி கேட்கிறார். இக்கேள்வியின் மூலம். தமிழகத்திலுள்ள எல்லா ஷைகுமார்களுக்கும் இவர் வக்காலத்து வாங்குவதாக நினைத்துக்கொண்டு இவர் ஷைகு மட்டும் தான் தமிழகமே என்பது போல் பசப்புகிறார்.

ஏன் தமிழகத்தில் காயல் மாமேதை ஸூபி ஹழ்ரத் இல்லையா? கம்பத்தில் ஷைகு அம்பா நாயகம் இல்லையா? தஞ்சையில் ஷத்தாரி தரீக்காவை சேர்ந்த சையத் இஸ்மத் பாஷா ஷைகவர்கள் இல்லையா? இவர்களெல்லாம் தப்லீக் தலைவர்களில் காபிராகிப் போன ஒருவரை தௌபா செய்து விட்டார் என்றா சொன்னார்கள்? அல்லது ஜமா அத்தே இஸ்லாமியும், நஜாஸத் வாதிகளும் நல்லவர்கள் என்று சொன்னார்களா? இவர்களை எல்லாம் விட்டுவிட்டு உங்களின் ஷைகை மட்டும் நாம் சுட்டிக் காட்டுகிறோம் எனில், மௌலவி அஷ்ரப்அலி தானவியை ரஹ்மதுல்லாஹி அலைஹி) என்று துஆசெய்து பேசும் தப்லீக்வாதிகளுக்குப் உங்களின் ஷைகுக்கும் மத்தியில் என்ன வித்தியாசம் என்பதை சொல்லுங்கள். உங்களின் ஷைகை சுன்னத்வல்ஜமா அத்தைச் சார்ந்தவர் என்று எந்த ஆதாரத்தைவைத்து ஒப்புக்கொள்ளச் சொல்கிறீர்கள்?

நாம் சொன்ன ஒரு வார்த்தை மௌலானா பைஜீஷாஹ் அவர்களின் முரீதுகளின் மத்தியில் நம்மீது கோபத்தை கிளறி விட்டிருக்கிறது, அந்த அளவுக்கு அவர்கள் தமது ஷைகின் மீது கொண்டுள்ள நேசத்தை எண்ணி உண்மையில் நாம் பெருமைப்படுகிறோம். அல்லாஹ்வின் நேசர்களை நேசிப்பது மட்டும்தான் வணக்கமா? அல்லாஹ்வின் விரோதிகளை வெறுப்பது கூட வணக்கம் தான் என்பது உங்களுக்குத் தெரியாதா?

**"ஹுஸாமுல் ஹரமைன்"** என்னும் தலைப்பிலும், ''ஃபர்ரத்மின்கஸ்வரா'' என்னும் தலைப்பிலும், **"அஸ்ஸவாரிமுல்ஹிந்திய்யா"** என்னும் தலைப்பிலும்

இந்நிலையில் அல்லாஹ், ரஸூலின் மீது கொண்டுள்ள நேசம் மட்டும் ஒருவரை சுன்னத் வல் ஜமா அத் கொள்கையைச் சார்ந்தவர் என்பதற்கு ஆதாரமாகாது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அவ்வாறாயின் ஒருவர் தம்மை சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவர் என்று ருஜுப்படுத்துவதற்கு வேறு ஆதாரமொன்றும் தேவைப்படுகிறது. அது என்ன தெரியுமா? அல்லாஹ் மற்றும் அவனது ரஸூலின் விரோதிகளை தனது விரோதியாக எண்ணி வெறுப்பதாகும். இன்று இந்த ஆதாரத்தை கொண்டுதான் ஒருவர் சுன்னத் வல் ஜமா அத்தை சார்ந்தவரா? இல்லையா? என்று தீர்மானிக்கப்படுகிறார். இதைப் பற்றி அல்லாஹ் திருமறையில்,

" யார் அல்லாஹ்வுக்கும் இன்னும் அவனது மலக்குகளுக்கும் இன்னும் ஜிப்ரயீலுக்கும் இன்னும் மீக்காயீலுக்கும் விரோதியாக இருக்கின்றார்களோ, திடனாக அவர்கள் அல்லாஹ்வை நிராகரிக்கின்ற விரோதிகள் " என்று கூறுகின்றான்.

பரேலியிலுள்ள ஷைகுமார்கள் மட்டும் தான் சுன்னத் வல்ஜமா அத் கொள்கைக்கு சொந்தக்காரர்களா? தமிழகத்திலுள்ள ஷைகுமார்கள் சுன்னத் வல் ஜமாத் கொள்கை கொண்டவர்கள் இல்லையா? என்று பைஜுல் இஸ்லாம் ஆசிரியர் கேள்வி கேட்கிறார். இக்கேள்வியின் மூலம். தமிழகத்திலுள்ள எல்லா ஷைகுமார்களுக்கும் இவர் வக்காலத்து வாங்குவதாக நினைத்துக்கொண்டு இவர் ஷைகு மட்டும் தான் தமிழகமே என்பது போல் பசப்புகிறார்.

ஏன் தமிழகத்தில் காயல் மாமேதை ஸூபி ஹழ்ரத் இல்லையா? கம்பத்தில் ஷைகு அம்பா நாயகம் இல்லையா? தஞ்சையில் ஷுத்தாரி தரீக்காவை சேர்ந்த சையத் இஸ்மத் பாஷா ஷைகவர்கள் இல்லையா? இவர்களெல்லாம் தப்லீக் தலைவர்களில் காபிராகிப் போன ஒருவரை தௌபா செய்து விட்டார் என்றா சொன்னார்கள்? அல்லது ஜமா அத்தே இஸ்லாமியும், நஜாஸத் வாதிகளும் நல்லவர்கள் என்று சொன்னார்களா? இவர்களை எல்லாம் விட்டுவிட்டு உங்களின் ஷைகை மட்டும் நாம் சுட்டிக் காட்டுகிறோம் எனில், மௌலவி அஷ்ரப்அலி தானவியை (ரஹ்மதுல்லாஹி அலைஹி) என்று துஆசெய்து பேசும் தப்லீக்வாதிகளுக்குப் உங்களின் ஷைகுக்கும் மத்தியில் என்ன வித்தியாசம் என்பதை சொல்லுங்கள். உங்களின் ஷைகை சுன்னத்வல்ஜமா அத்தைச் சார்ந்தவர் என்று எந்த ஆதாரத்தைவைத்து ஒப்புக்கொள்ளச் சொல்கிறீர்கள்?

நாம் சொன்ன ஒரு வார்த்தை மௌலானா பைஜீஷாஹ் அவர்களின் முரீதுகளின் மத்தியில் நம்மீது கோபத்தை கிளறி விட்டிருக்கிறது, அந்த அளவுக்கு அவர்கள் தமது ஷைகின் மீது கொண்டுள்ள நேசத்தை எண்ணி உண்மையில் நாம் பெருமைப்படுகிறோம். அல்லாஹ்வின் நேசர்களை நேசிப்பது மட்டும்தான் வணக்கமா? அல்லாஹ்வின் விரோதிகளை வெறுப்பது கூட வணக்கம் தான் என்பது உங்களுக்குத் தெரியாதா?

"ஹுஸாமுல் ஹரமைன்" என்னும் தலைப்பிலும், ''ஃபர்ரத்மின்கஸ்வரா'' என்னும் தலைப்பிலும், "அஸ்ஸவாரிமுல்ஹிந்திய்யா" என்னும் தலைப்பிலும்

தப்லீக் தலைவர்களில் ஒருவரான மௌலவி அஷ்ரப் அலீ தானவியை காபிர் என்று பத்வா வழங்கப்பட்ட பின்னரும் நமக்கெதிராகத் திரளும் பைஜிகள் அவர் தௌபா செய்து விட்டார் என்று சொல்லும் உங்களின் ஷைகை நோக்கித் திரண்டு சென்று அஷ்ரப் அலீ தானவி, தௌபா செய்துவிட்டாரா? என்று கேளுங்கள். எப்போது செய்தார் என்று கேளுங்கள். எந்த நூலில் அதுபற்றி போடப்பட்டுள்ளது என்று விபரம் கேளுங்கள்.

என்ன வேண்டுமானலும் எழுதுங்கள். ஆனால் அதற்குமுன் உமது பத்திரிக்கையில் நீர் தந்த வாக்குப்படி அஷ்ரப் அலி தானவி எப்போது தௌபா செய்து சுன்னத் வல் ஜமா அத் கொள்கைக்கு மாறினார் என்பதைப் பற்றி எழுதிவிட்டு எழுதுங்கள் உங்களுக்குத் தெரியவில்லை என்றால் சம்பந்தப்பட்டவர்களிடம் கேட்டு எழுதுங்கள் மூன்று மாதம் உங்களுக்கு அவகாசம் தருகிறோம். அதுவரை உங்களைப் பற்றி ஒரு வார்த்தை கூட பேசமாட்டோம்.

இதுவரை உங்களின் ஷைகை பற்றி நாம் ஒரு வார்த்தை கூட தவறாகப் பேசவில்லை அஷ்ரப் அலீ தானவி தௌபா செய்துவிட்டார் என்று சொன்னதற்கு விபரம் கேட்கிறோம். அவ்வளவே ''நீங்கள் அறியாதவர்களாயிருந்தால் அறிந்தோரிடம் (அஹ்லுத்திக்ரி) கேளுங்கள்" என்று அல்லாஹ் சொல்லித் தருவதால் கேட்கிறோம்.

# தர்க்காவின் பெயரால் தடுமாறும் பைஜியும், ஜமாலியும்!

## முஸ்லிம் குரல் கனீ சிஷ்தி பதில் தருகிறார்!!

5.7.95 இதழில் பைஜுல் இஸ்லாம் ஆசிரியர் வஹ்ஹாபிய வழிகேடன் அஷ்ரப் அலீ தானவியை சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவரென்றும், ரஹ்மதுல்லாஹி அலைஹி என்றும், அவர் தௌபா செய்துவிட்டாரென்றும் பலவாறு உளறியிருந்தார்.

பின்னர் தமிழக சுன்னத் வல் ஜமா அத்தாரின் பலத்த கண்டனக் குரல் கண்டு 20.8.95 இதழில் பதிலடி தொடரும் என்ற தலைப்பில் 33வது வரியில் “எங்களுக்கு மௌலவி அஷ்ரப் அலீ (தானவி) அவர்களைப்பற்றி பிரச்சனையே இல்லை.” என்று எழுதினார். மேலும் தானவிக்கு ரஹ்மதுல்லாஹி அலைஹி என போடாமல் அவரை அந்தரத்தில் பரிதாபமாக தொங்கவிட்டிருந்தார். இதை பார்த்த நாம் சரி பிள்ளைக்கு நல்லபுத்தி வந்து விட்டது போலும்! என்று நினைத்தோம்.

ஆனால் மீண்டும் 5.10.95 இதழில் வேதாளம் மறுபடியும் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டது. எந்த அமீரும், ஷைகும் அவரிடம் என்ன சொன்னார்களோ, மறுபடியும் அஷ்ரப் அலீ தானவிக்கு வக்காலத்து வாங்கி அவர் மெய்யான சூபியென்றும், அவர் சுன்னத் வல் ஜமா அத்தை சார்ந்தவர் தான் என்பதை விரைவில் நிரூபிப்போம் என்றும் அபூஜஹ்லை அல்லாமாவாக்கப் பார்க்கிறார். பரிதாபம். பைஜுல் இஸ்லாம் ஆசிரியரே! உமது ஒவ்வொரு வார்த்தைக்கும் இன்ஷா அல்லாஹ் பதில் தருவோம்.

அதற்குமுன் நீர் எந்தப் பத்திரிக்கையின் சந்தா சேர்ப்பாளராகப் பணிபுரிந்து கொண்டிருந்தீரோ, அதன் ஆசிரியர் ஜனாப் கனி சிஷ்தி அவர்கள் தமது "முஸ்லிம் குரல்" மாத இதழில் 15-6-84 இதழ் பக்கம் 5ல் மௌலவி அஷ்ரப்அலீ தானவி பற்றி, நாடோடிகளின் நச்சுக் கருத்துக்கள் என்னும் தலைப்பில்,.......

"பெருமானார் அவர்கள், தேவ்பந்த் தலைவர்களின் முதுகுக்குப் பின்னால் அமர்ந்திருக்கிறார்களாம்!"

அல்லாஹ் நம்மைக் காக்க வேண்டும். ( கனவுக்கு விளக்கம் அளிக்கும் தொடர்பில் அதற்கு பதில் சொன்னார், உங்களுடைய பீர் (ஷைகு) அங்கு அமர்ந்திருக்கிறார். அந்த பீரிடமிருந்து நான் ( இதையே) சொன்னேன். ஹாஜி சாஹிபுக்கு பின்னால் அமர்ந்திருப்பது யார்? ஹாஜி சாஹிப் சொன்னார் ஹஜ்ரத் முஹம்மத் அமர்ந்திருக்கிறார்கள் என்று.
(ஆதாரம் :- அஸ்தகுர்ருஃயா தானவி பாகம்-2 பக்கம்-26 வரி-9.

இத்தகைய ஒளிமயமான உள்ளமையைப்பற்றி தேவ்பந்து இம்தாதுல்லாஹ்வின் (மூத்த மகள்) சொல்வது (மேற்கண்ட) இதுதான்!அதிலே தானவி சாஹிப் அவர்களுக்கு மாபெரும் பெருமை! அதை உண்மைக் கனவென்று பெரிதுபடுத்திச் சொல்லி பெருமானார் அவர்கள் தேவ்பந்திகளுக்குப் பின்னால் அமர்ந்திருக்கிறார்கள் என்று விளம்பரப்படுத்தி இருக்கிறார்.

.....அதாவது நாயகம் அவர்களுக்குத் தெரியக் கூடிய மறைவான சங்கதி போன்ற அறிவு

( சாதாரண மனிதர்களான) ஜெய்துக்கும், அம்ருக்கும் சில மதலைகளுக்கும், பைத்தியக்காரர்களுக்கும்தான் - ஏன் எல்லா ஜீவராசிகளுக்கும், மிருகங்களுக்கும் கூடத்தான் உண்டு.

பார்த்தீரா! பத்திரிக்கை துறையில் உமக்கு ஆசானாக இருப்பவரே அஷ்ரப் அலீ தானவியை நாடோடி என்று கூறுகின்றார்.

அடுத்து 15.10.85 முஸ்லீம் குரலில் K.J.M. ரஜ்வீ என்பவர் தேவ்பந்தி (குழப்பவாதி) கள் முகத்திரை கிழிகிறது என்னும் தலைப்பில் தேவ்பந்திகளின் 6 இமாம்கள் என்று போட்டு,

1. மௌலவி முஹம்மத் இஸ்மாயீல் தெஹ்லவி, (இவர் தேவ்பந்த் மத்ஹபின் முதல் இமாம், ஸ்தாபகரும் ஆவர்.

2. மௌலவி முஹம்மத் காசிம் நானூத்வீ (இவர் இரண்டாவது இமாம், ஸ்தாபகரும் ஆவர்.)

3. மௌலவி ரஷீத் அஹ்மத் கங்கோஹி
(இவர் மூன்றாவது இமாம்)

4. மௌலவி கலீல் அஹ்மத் சாஹிப் அம்பேட்டி சஹாரன்பூர்.
(இவர் மத்ரஸாவின் தலைமையாசிரியர், நான்காவது இமாம்)

5. மௌலவி அஷ்ரப்அலீ தானவி
(இவர் தேவ்பந்த் பிர்காவின் முஜத்தித், ஹக்கீம் ஐந்தாவது இமாம்)

6. மௌலவி ஹுசைன் சாஹிப் பஞ்சாபி.

அதற்குமுன் நீர் எந்தப் பத்திரிக்கையின் சந்தா சேர்ப்பாளராகப் பணிபுரிந்து கொண்டிருந்தீரோ, அதன் ஆசிரியர் ஜனாப் கனி சிஷ்தி அவர்கள் தமது "முஸ்லிம் குரல்" மாத இதழில் 15-6-84 இதழ் பக்கம் 5ல் மௌலவி அஷ்ரப்அலீ தானவி பற்றி, நாடோடிகளின் நச்சுக் கருத்துக்கள் என்னும் தலைப்பில்,.......

"பெருமானார் அவர்கள், தேவ்பந்த் தலைவர்களின் முதுகுக்குப் பின்னால் அமர்ந்திருக்கிறார்களாம்!"

அல்லாஹ் நம்மைக் காக்க வேண்டும். ( கனவுக்கு விளக்கம் அளிக்கும் தொடர்பில் அதற்கு பதில் சொன்னார், உங்களுடைய பீர் (ஷைகு) அங்கு அமர்ந்திருக்கிறார். அந்த பீரிடமிருந்து நான் ( இதையே) சொன்னேன். ஹாஜி சாஹிபுக்கு பின்னால் அமர்ந்திருப்பது யார்? ஹாஜி சாஹிப் சொன்னார் ஹஜ்ரத் முஹம்மத் அமர்ந்திருக்கிறார்கள் என்று.
(ஆதாரம் :- அஸ்தகுர்ருஃயா தானவி பாகம்-2 பக்கம்-26 வரி-9.

இத்தகைய ஒளிமயமான உள்ளமையைப்பற்றி தேவ்பந்து இம்தாதுல்லாஹ்வின் (மூத்த மகள்) சொல்வது (மேற்கண்ட) இதுதான்! அதிலே தானவி சாஹிப் அவர்களுக்கு மாபெரும் பெருமை! அதை உண்மைக் கனவென்று பெரிதுபடுத்திச் சொல்லி பெருமானார் அவர்கள் தேவ்பந்திகளுக்குப் பின்னால் அமர்ந்திருக்கிறார்கள் என்று விளம்பரப்படுத்தி இருக்கிறார்.

.....அதாவது நாயகம் அவர்களுக்குத் தெரியக் கூடிய மறைவான சங்கதி போன்ற அறிவு

(சாதாரண மனிதர்களான) ஜெய்துக்கும், அம்ருக்கும் சில மதலைகளுக்கும், பைத்தியக்காரர்களுக்கும்தான் - ஏன் எல்லா ஜீவராசிகளுக்கும், மிருகங்களுக்கும் கூடத்தான் உண்டு.

பார்த்தீரா! பத்திரிக்கை துறையில் உமக்கு ஆசானாக இருப்பவரே அஷ்ரப் அலீ தானவியை நாடோடி என்று கூறுகின்றார்.

அடுத்து 15.10.85 முஸ்லீம் குரலில் K.J.M. ரஜ்வீ என்பவர் தேவ்பந்தி (குழப்பவாதி) கள் முகத்திரை கிழிகிறது என்னும் தலைப்பில் தேவ்பந்திகளின் 6 இமாம்கள் என்று போட்டு,

1. மௌலவி முஹம்மத் இஸ்மாயீல் தெஹ்லவி, (இவர் தேவ்பந்த் மத்ஹபின் முதல் இமாம், ஸ்தாபகரும் ஆவர்.

2. மௌலவி முஹம்மத் காசிம் நானூத்வீ (இவர் இரண்டாவது இமாம், ஸ்தாபகரும் ஆவர்.)

3. மௌலவி ரஷீத் அஹ்மத் கங்கோஹி
(இவர் மூன்றாவது இமாம்)

4. மௌலவி கலீல் அஹ்மத் சாஹிப் அம்பேட்டி சஹாரன்பூர்.
(இவர் மத்ரஸாவின் தலைமையாசிரியர், நான்காவது இமாம்)

5. மௌலவி அஷ்ரப்அலீ தானவி
(இவர் தேவ்பந்த் பிர்காவின் முஜத்தித், ஹக்கீம் ஐந்தாவது இமாம்)

6. மௌலவி ஹுசைன் சாஹிப் பஞ்சாபி.

அடுத்து 1985-ம் வருடம் சென்னை வாலாஜா பள்ளியில் நடைபெற்ற சுன்னத் வல் ஜமா அத் மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் 15-10-85 முஸ்லீம் குரலில் பொது வேண்டுகோள் என்னும் தலைப்பில் சுன்னத் வல் ஜமாஅத் அல்லாதாரின் பிரசுரங்களையும், நூல்களையும் புறக்கணிக்கப்பட வேண்டும் என்றும் நமது சுன்னத் ஜமாஅத் கொள்கையைச் சார்ந்தவர்கள் பிற கொள்கையைச் சார்ந்தவர்களின் நூற்களை அதிகம்படிக்கும் ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள். நமது கொள்கையை போதிக்கும் நூல்களை படிப்பதில் அவ்வளவாக ஆர்வம் செலுத்துவதில்லை.

ஆகவே சுன்னத் வல் ஜமா அத்தைச் சேர்ந்த உலமாக்களால் எழுதப்பட்ட நூல்களை தவிர மற்றவர்களின் நூல்களை படிக்காமல் இருக்கும்படி நம்மைச் சார்ந்த அனைத்து இஸ்லாமிய ஆண் பெண்களிடம் இந்த மாநாடு வேண்டுகோள் விடுகிறது.

ஜனாப் கனீ சிஷ்தீ எதைச் சொன்னாரோ, அதைத்தான் அஹ்லெ சுன்னத் சொன்னது. என்ன ஒரு வித்தியாசம் எனில், மௌலானா பைஜீஷாஹ் அவர்களின் மேற்பார்வையில் நடத்தப்பட்டுவரும் பைஜுல் ஹஸனாத் அரபிக் கல்லூரியில் அஷ்ரப் அலீ தானவியின் நூல் பாடமாக கற்பிக்கப்படுகிறது என்று பைஜீஷாஹ்வை இணைத்து பேசியதால் நீர் உமது ஷைகுக்கு வக்காலத்து வாங்குவதாக நினைத்துக்கொண்டு ஒரு காபிரின் குப்ரையே மறுக்கத் துவங்கியுள்ளீர்

( உமது அறியாமைக்கு மூன்று மாதம் தவணை தந்தோம். நீர் உமது தவறை திருத்திக் கொள்வீரென்று. ஆனால் உமது ஷைகுமார்களின் இரட்டை வேடத்தை

வெளிப்படுத்த வேண்டிய கட்டாயம் ஏற்பட்டு விட்டது. இப்போது சொல்கிறோம், உமது ஷைகு மௌலானா பைஜீஷாஹ் அவர்களை ஒன்றுக்கு மூன்றுமுறை சந்தித்தபோது அவர்களே தமது வாய்ப்பட மௌலவி அஷ்ரப் அலீ தானவி தௌபா செய்துவிட்டார் என்பதை தான் கூறகேட்டோம்.

மேலும் உங்களின் ஷைகுமார்களில் பலபேர் தப்லீக் தலைவர்களில் காபிர் என்று தீர்ப்பளிக்கப்பட்டவர்களை "காபிர்" என ஒப்புக்கொள்ளத் தயாராயில்லை. என்பதை அவர்கள் எழுதிய நூல்களும், அவர்களின் தடம்மாறிப் போன கொள்கைகளும், பின்னும் பைஜுல் ஹஸனாத் கல்லூரியின் முதல்வர் மௌலானா ஜமாலிஷாஹ் அவர்களின் கடிதமும் நமக்கு தெரியப்படுத்துகின்றன.

ஆதலால் பைஜீல் இஸ்லாம் ஆசிரியரே! முதலில் முஸ்லீம் குரல் ஆசிரியரிடம் சென்று வழிகேடன் அஷ்ரப்அலி தானவிபற்றி, அவர் எப்போது தவ்பா செய்தார் என்பது பற்றி விபரம் கேளும். அப்போதுதான் உம்மை பிடித்துள்ள காழ்ப்புணர்வு நீங்கும்.

## ஜமாலீ தமது முகத்தை மறைத்துள்ள திரையை நீக்குகிறார்!

**ஜாமலி ஷாஹ்**

**வழிகேடன் " அஷ்ரப் அலி தானவி " க்கு வக்காலத்து வாங்கி அஹ்லெ சுன்னத் பத்திரிக்கைக்கு எழுதிய கடிதம்.**

**(ஜனவரி - 1996)**

நான் ஒரு வருடம் சஹாரன்பூரில் தவ்ரத்துல்ஹதீஸ் கல்வி பயிலும் காலத்தில் ஷைகுல்

ஹதீஸ் மர்ஹூம் ஜகரிய்யா மௌலானா அவர்களிடத்தில் ஹதீஸ் கலையை பயின்ற போது ஒரு ஆண்டு வரை அவர்களது தோழமையைப் பெரும் வாய்ப்பு கிடைத்தது.

அது சமயம் அவர்கள் வாழ்க்கை வரலாற்றை உற்று நோக்கும் காலத்தில் நபிகளின்மீது காதலாராகவே அவர்களைநான்கண்டேன். ஹதீஸ் கலையில் பிரசித்து பெற்றவர்களாகத் திகழ்ந்த அவர்கள் தங்கள் சிறியதந்தை இல்யாஸ் (ரஹ்) அவர்கள் பற்றியும், அவர்களது சேவையைப் பற்றியும் நல்லகருத்துகளையே கூறியுள்ளார்கள். அவர்கள் எழுதிய நூற்களிலும் அவர்கள்பற்றி நல்லஅபிப்ராயங்களையே கொண்டுள்ளார்கள்.

மேலும் மௌலானா அஷ்ரப் அலீ தானவி அவர்களின் பிரதான கலீபாக்களில் ஒருவரை சந்திக்கும் வாய்ப்பும் கிடைத்தது. அவர்களில் ஹஜ்ரத் மௌலானா அஸ்அதுல்லாஹ் சாஹிப் அவர்களும் ஒருவர் ஆவார். அவர்கள் மத்ரஸாயே மழாஹிருல் உலூம் எனும் ஸ்தாபனத்தின் நாழிமும், இன்னும் அபூதாவூத் என்னும் ஹதீஸ் கிரந்தத்தை அவர்களிடம் நான் பயின்றதன் மூலம் எனக்கு அவர்கள் உஸ்தாதுமாவார்கள்.

அதுபோன்றே மௌலானா மஸீஹுல்லாஹ் சாஹிப் அவர்களும் ஒரு கல்லூரியின் நாழிம். இவர்கள் எல்லாம் சந்திக்கும் வேளை! நபியவர்கள் மீது காதலர்களாகவே நான் பெற்றேன். எனது உஸ்தாது அஸ்அதுல்லாஹ் சாஹிப் அவர்களிடத்தில் அபூதாவூத்

ஷரீபை மாணவர்கள் படிக்கும்போது....

கால கால ரஸுலுல்லாஹி ஸல்அம் என வாசிக்கும் சமயத்தில் ஸலவாத்தை சுருக்கி ஸல்அம் என்று படிக்கும் போது மாணவர்களை ஷைத்தான் என ஏசி ஸலவாத்தை முழுமையாக கூறச் சொல்வார்கள்.

இப்படி அவர்களின் கலீபாக்களை நான் பெற்ற காலத்தில் அவர்களது ஹழரத் "அஷ்ரப் அலி தானவி அவர்கள் விஷயத்தில் நாம் என்ன கூற முடியும்? காபிர் எனக் கூற முடியுமா? என்பதை யோசியுங்கள்.

(நவூது பில்லாஹ்)

## ஜமாலிஷாஹ் பதில் தருவாரா?
## (அஹ்லெ சுன்னத் பிப்ரவரி மாத இதழ்– 1996)

நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அஷ்ரப் அலீ தம்மை நபீ என்று மட்டும் சொன்னதை வைத்து அவரை காபீர் என்று சொல்ல முடியாது. காரணம் அஹ்லுல் கிப்லாவாக இருக்கிறார். ஆதலால் அஷ்ரப் அலீ தம்மை நபீ என்று சொன்னதற்காக மட்டும் அவரை காபிர் என்று பத்வா தந்த மக்கா மதீனாவின் 35உலமாக்களும் இந்திய நாட்டின் 265 உலமாக்களும் தௌபா செய்து தமது பத்வாவை திரும்பப் பெற வேண்டும். இல்லையெனில் பத்வா தந்த அனைவரும் மார்க்க விரோதிகளாகி விடுவார்கள் என்று சொல்கிறீர்களா? அல்லது நெருப்புக் கோழி தன் தலையை மண்ணில் புதைத்துக் கொள்வது போல் நீங்கள் உங்களின் உஸ்தாதுகளின் முந்தானையில் மறைந்து கொள்ளப் பார்க்கிறீர்களா?

சுன்னத் வல் ஜமா அத்தினர் யார்? அதன்

கொள்கைகள் என்ன? என்பது கண்டு கொள்ள முடியாத அளவிற்கு நமது சமுதாயத்தில் உலமாக்களே இருக்கின்றனர் என நீங்கள் சொல்வது உங்கள் கடிதத்தைப் பார்த்தாலே தெரிகின்றது.

ஒன்று தெரியுமா? அல்லாஹ் ரஸுலை குறை சொன்ன யாரையுமே இமாம்கள் "முஃமின்" என்று சொன்னதில்லை. பின்னும் அத்தகையோர் முஃமின்களல்ல என்பதுதான் முடிவான சொல்லும் கூட. இது உங்களுக்கு தெரியாதா என்ன?

இனி ஈமான், குப்ரு சம்பந்தமான பிரச்சனை "கல்பு" சம்பந்தப்பட்டது. ஆதலால் மௌலவி அஷ்ரப் அலீ தானவி சொன்னதை, அல்லது எழுதியதை வைத்து அவரை காபிர் என்று பத்வா தந்தது சரியல்ல என்று சொல்கிறீர்களா? நீங்கள் ஒரு காபிருக்கு வக்காலத்து வாங்குவதன் மூலம் ஒரு திரண்ட சமுதாய மக்களை வழி கெடுக்க முனைகிறீர்கள்? அப்படியானால் நீங்கள் சொல்வது போன்று ஒருவனை வெட்டிக் கொலை செய்தவன் நான் அவனைக் கொல்ல வேண்டுமென்ற எண்ணத்தில் கொல்லவில்லை என்று சொன்னால் நீர் அவனை கொலைக் குற்றவாளி இல்லையென்று சொல்லி விடுவீரா? என்ன பேசுகிறீர்?

அஷ்ரப் அலீ தானவி நபிகளாரை திட்ட வேண்டுமென்ற எண்ணத்தில் தமது நூலில் அவ்வாறு எழுதவில்லை. அவர் எவ்வளவு பெரிய மனிதர். எத்தனை ஆயிரமாயிரம் நூல்களை எழுதியிருக்கிறார். அவர் எப்படி தனது நபியை களங்கப்படுத்திப் பேசுவார்? (எழுதுவார்) ஆகவே அவரது எண்ணம் (கல்பு) சரியல்ல என்று நாம் எப்படிச் சொல்ல முடியும்? என்று யோசிக்கின்றீரா?

ஒன்று தெரியுமா? மௌலவி அஷ்ரப் அலீ தானவி உயிரோடு இருக்கும் போது தான் அவர் தமது நூலில் நபிகளாரைப் பற்றி எழுதியதற்காக காபிர் என்று பத்வா கொடுக்கப்பட்டார். அந்த பத்வாவை அவர் பார்த்த பிறகும் கூட, தான் செய்தது தவறு என்று அவர் தௌபா செய்யவில்லை, மீரட் மௌலானா அவர்கள் அஷ்ரப் அலியை நேரில் சந்தித்து தௌபா செய்யச் சொன்ன போது கூட தௌபா செய்யவில்லை. இப்படிப்பட்ட இஸ்லாமிய துரோகிக்கு வக்காலத்து வாங்குவதன் மூலம் நீர் ஒரு போலி என்பதை இனங்காட்டியதற்கு நன்றி!
- அஹ்லெசுன்னத் ஆசிரியர் F.M. இப்ராஹிம் ரப்பானி

15 வருடத்திற்கு முன்பே பைஜிஷாஹ் இடமும், ஜமாலிஷாஹ் இடமும் தொடர்ந்து நேருக்கு நேர் சந்திப்பிலும், அவர்கள் ஓர் வழிகேடனுக்கு வக்காலத்து வாங்கியதால் ஹுஸாமுல் ஹரமைன் பத்வாவின் தீர்ப்பு படி இவர்களும் வழிகேடர்களே!

எத்துணை ஆதாரத்தை காட்டினாலும், ஒருபோதும் உண்மையை ஏற்க இவர்கள் தயாரில்லை. எனவே ஈமான் கொண்ட சீமான்களே! இத்தகைய தவறான தரீக்காவினரை விட்டு விலகிகொள்ளுங்கள். அஹ்லசுன்னத் உலமா சபையின் எச்சரிக்கையின் படி நடந்து இவர்களிடம் பைஅத் பெற்று இருந்தால் உடனே தவ்பா செய்து உண்மை ஷெய்குமார்களிடம் பைஅத் பெறவேண்டும் எனவும் ஈமானை காப்பாற்றிக் கொள்ள வேண்டுமெனவும் மிகத் தாழ்மையுடன் வேண்டுகிறோம்.

வஸ்ஸலாம்

# ஆதார நூல்கள்

1. திருக் கலிமாவின் பொக்கிஷம்
ஆசிரியர்: M.S.அப்துல்காதிர் பாக்கவி
எனும் ஜனிஷாஹ்

2. நூருன்னூர்
உருது ஆசிரியர்: கௌஸி ஷாஹ் சிஷ்தி
தமிழில்: மௌலவி A.A.ஷேக் அப்துல் காதிர் மன்பஈ
எனும் இர்பானி ஷாஹ் நூரி

3. ஷைகுனா ஸையிது நூரிஷாஹ் -
ஷைகுனா ஜுஹூரி ஷாஹ் நினைவு மலர்
ஆசிரியர்: முஸ்லிம் குரல் கனி சிஷ்தி

4. மெய்ஞான வழித் தொடர் ஷஜரா
வெளியீடு: சில்சிலாயே பைஜியா, லால்பேட்டை

5. அஹ்லெ சுன்னத் மாத இதழ்
ஆசிரியர்: F.M.இப்ராஹீம் ரப்பானி, திருச்சி

6. தர்கா - இரு மாத இதழ்
தர்கா வெளியீட்டகம், தஞ்சை

7. அல் ஹகீகா
ஆசிரியர்: அஷ்ஷைகு முஹம்மது ஜலாலுத்தீன்
பூக்கோயா தங்கள் ஸூபி காதிரி
கத்தஸல்லாஹு ஸிர்ரஹூல் அஜீஸ்

## ஆதார நூல்கள்

8. தப்லீக் ஜமாத் என்றால் என்ன?
ஆசிரியர்: அஷ்ஷைகுல் காமில்
ஷெய்கு அப்துல்காதிர் ஸூபி காதிரி
கத்தஸல்லாஹு ஸிர்ரஹூல் அஜீஸ்

9. தேவ்பந்தின் 200 வருட இறைநேசச் செல்வர்கள்
ஆசிரியர்: மௌலவி M.J. கமாலுத்தீன் பாக்கவி

10. ஸீரத்தே சையத் அஹ்மத்
ஆசிரியர்: அபுல் ஹஸன் நத்வி

11. கூன்கே ஆன்ஸூ
ஆசிரியர்: மௌலான முஸ்தாக் அஹ்மத் சாஹிப் நிஜாமி, இலாஹாபாத்

12. 15.5.77 அன்று ஹாஜி M.அப்துல் ஹக்கீம், ஆயங்குடி அவர்களால் வெளியிடப்பட்ட இ.கே. ஹஸன் முஸல்லியார் பத்வா

13. ஸமஸ்த கேரளா ஜம்இய்யத்துல் உலமா சபை தீர்மானம்

14. தமிழ்நாடு மஜ்லீஸுல் உலமாஇ அஹ்லெஸ் சுன்னத் வல் ஜமாஅத் சபையின் தீர்மானம்

15. இப்திராகே பைனல் முஸ்லிமீன்கே அஸ்பாப் (உருது நூல்)
ஆசிரியர்: முபாரக் ஹுஸைன் மிஸ்பாஹி

# புனித தரீக்காக்களில்

## வஹ்ஹாபிய விஷக் கிருமிகள்

(மூலம் : நூரிஷாஹ் தரீக்காப் பற்றிய உண்மைகள்)
www. sufi manzil.org

**லஜ்னதுல் இர்ஃபான்ஃபீ**
**ரியாழதில் பயான்**
**மாணவர் சொற்பொழிவு மன்றம்**
**திருச்சி-620 009.**


தொகுப்பாளர் :

மௌலானா மௌலவி அல்ஹாஜ்
**M.அப்துர் ரஸ்ஸாக்** காதிரி ஸூபி
*(பேராசிரியர், தாருல் உலூம் ஜெளதிய்யா அரபிக் கல்லூரி, தஞ்சை)*


لجنة العرفان في رياضة البيان


வெளியீடு :
**ருகையா பதிப்பகம்**
மேல வழுத்தூர், தஞ்சை.
email: razaaksoofi@yahoo.com

# சிறு குறிப்பு

நூலின் பெயர் : புனித தரீக்காக்களில்
வஹ்ஹாபிய விஷக் கிருமிகள்

மூலம் : நூரிஷாஹ் தரீக்காப் பற்றிய
உண்மைகள்
www. sufi manzil.org

தொகுப்பாளர் : மௌலவி
M.அப்துர் ரஸ்ஸாக் காதிரி ஸூபி
(பேராசிரியர், தாருல் உலூம் கௌதிய்யா
அரபிக் கல்லூரி, தஞ்சை).

நூலின் நோக்கம் : தேவ்பந்த் வஹ்ஹாபிகள்
புனித தரீக்காவிலும் புகுந்து
மக்களை வழி கெடுப்பதை
தடுக்கும் முயற்ச்சியே

முதல் பதிப்பு : ரஜப், ஹிஜ்ரி 1432 (ஜூன் 2011)



நன்கொடை : ரூ.25.00

வெளியீடு : ருகையா பதிப்பகம்
மேல வழுத்தூர், தஞ்சை.
email: razaaksoofi@yahoo.com

புத்தகம் கிடைக்குமிடம்: ✆:04362-270786
74/176-A, முதல் மாடி,
ரெட்டை மஸ்தான் தர்ஹா எதிரில்,
காந்திஜி ரோடு, தஞ்சாவூர் - 613 001.

# பொருளடக்கம்